# கல்கி

KALKI 21.8.88 ரு. 2.





## விவசாயப் புரட்சிக்கு வித்திடும் பண்ணை

"அம்மாவோட காபியை விட என் காபி ரொம்ப நல்லாயிருக்கும்!"

Parry's

காஃபி பைட்

COFFY BITE

"காபின்னு இப்படித்தான் இருக்கணும்!"






பாரிஸின் தரமான தயாரிப்புகள்

காரமில்க்· சாக்லெட் எக்ளேர்ஸ்
ட்ரை-மி· கோகனட் கிரீம்· சாக்லேர்ஸ்
லால்லிபாப்ஸ்· காஃபி பைட்




HTA 7037

புதுதில்லியில் மட்டுமே சமீபத்தில் காலரா நோய்க்குப் பலியானவர்களின் எண்ணிக்கை இருநூறை எட்டியிருக்கிறது. தலைநகரை இக்கொடிய நோய் பற்றியதற்குக் காரணம் பொது வினியோகக் குடிநீரோடு கழிவுநீர் கலந்து விட்டமைதான் — என்கிறார்கள். குப்பை கூளங்களை அகற்றுவது, 'செப்டிக்' டாங்குகள் மற்றும் 'சாக்கடைக் குழாய்களைச் சுத்தப்படுத்துவது, குடிநீர்க்குழாய்களைப்பராமரிப்பதுபோன்ற சுகாதாரப் பணிகளை ஆற்றுவதில் 'நகர நிர்வாகம் மெத்தனமாக இருந்துள்ளது கண்டறியப்பட்டுள்ளது. தில்லியில் காலரா பரவியதைக்கட்டுப்படுத்தமுடியாமல்போனதற்குத் தார்மீகப் பொறுப்பேற்று ராஜினாமா செய்துள்ளார் துணை நிலை ஆளுனர் கபூர். தில்லியில் ஆரம்பித்த காலரா இப்போது இந்தியாவின் ஒவ்வொரு மாநிலமாகப் பரவிக் கொண்டிருக்கிறது...



* தடுப்பூசி போடப்படுகிறது

# காலரா கலவரம்!

நாட்டின் இதர பகுதிகளுக்குக் காலரா எப்படிப் பரவுகிறது? காலராவால் பாதிக்கப்பட்ட தில்லி வாசிகள் சிலர், குணமடைந்தபிறகு,இதரமாநிலங்களுக்குப்போகையில் காலராக் கிருமிகளைத் தங்கள் உடலில் தாங்கிச் சென்றிருப்பார்கள். இவர்கள் உடல்நிலை தேறிவிட்டாலும் இவர்களுக்குள் காலராக் கிருமிகள் 'நல்ல ஆரோக்கியத்துடன்' இருக்கும். இவற்றைக் கழிப்பறைகளிலும், இவர்கள் கையாளும் உணவுப் பொருட்களிலும் விட்டுச் செல்கிறார்கள். இவ்வாறு கையாளப்பட்ட உணவுப் பொருட்களை உட்கொள்வோரும் சரி, அதே கழிப்பறைகளைப் பயன்படுத்துவோரும் சரி, காலரா நோயை விலைக்கு வாங்கும் அபாயத்தில் உள்ளனர்.

கழிவுநீர் கலந்துவிட்ட குடிநீரைப் பருகுவோருக்குக் காலரா ஏற்பட வாய்ப்பு இருக்கிறது. இவ்வாண்டு பல வடமாநிலங்களில் வெள்ளம் ஏற்பட்டதால் அரசாங்கங்களின் பாதுகாக்கப்பட்டகுடிநீர் நிலைகளில் அசுத்த நீர் கலந்திருக்கக்கூடும் என்று கருதுவதற்கு இடமிருக்கிறது. இதனால்தான் பல வட மாநிலங்களில் அடுத்தடுத்துக் காலரா பரவியிருக்கிறது என்றும் கூறலாம். மேற்கு வங்கம் போன்ற சில மாநிலங்களையும் நதிகளின் 'டெல்டா' பகுதி அமைந்துள்ள சில இடங்களையும் 'endemic areas' என்றே கூறுகிறார்கள் — அதாவது இந்த வட்டாரங்கள் காலராவுக்குப் 'பெயர் போனவை'! தமிழ்நாட்டில் திருவண்ணாமலை மற்றும் அதன் சுற்றுப்





இடிபாடடைந்த இந்தக் கட்டடத்தை அப்படியே பாதுகாத்து வருகிறது ஜப்பானிய அரசு. எதற்காக? அணுகுண்டு வீச்சின் பயங்கர விளைவை உலகுக்கு உணர்த்துவதற்காகத்தான். ஹிரோஷிமாவில் இந்தக் கட்டடம் தவிர, அணுகுண்டு வீச்சினால் ஏற்பட்ட துன்பங்கள், துயரங்களைக் காட்டும் புகைப்படக் கண்காட்சி ஒன்றும் நிரந்தரமாக அமைந்துள்ளது.

நன்றி: இண்டர்லெக்ட்.

புறங்கள் இத்தகையவை.

'ஆஸ்ட்ரோ என்டரைடீஸ்' எனப்படும் அதீதவயிற்றுப்போக்கு நோயின்ஒருமுற்றிய நிலைதான் காலரா. வயிற்றுப் போக்கு, வாந்தி, ஜுரம் — இவை அறிகுறிகள். கடுமையான வயிற்றுப் போக்கும் வாந்தியும் இருக்கும் போது அதைக் கவனிக்காமல் சற்று அலட்சியமாய் இருப்பதால்தான் உடலிலுள்ள நீர் வற்றிப் போய் மரணம் நேர்கிறது.

உடனடி சிகிச்சையாக உப்பும் சர்க்கரையும் சிறிதளவு கலந்த நீரைப் பருகலாம். மருந்துக் கடைகளில் 'எலெக்ட்ரோலைட்ஸ் தூள்' என்று கேட்டு வாங்கி அதைத் தண்ணீரில் கரைத்துக் குடிக்கலாம். பேதியுடன் வாந்தியும் கடுமையாக இருந்தால் நோயாளியால் நீர்கூடப் பருக முடியாது. இத்தகைய நிலையில் மருத்துவமனையில் சேர்த்து 'சலைன் ட்ரிப்' கொடுக்க வேண்டி வரும்.

உடல் இழந்துள்ள நீரை ஈடுகட்டும் முயற்சியைத்தான் முதலில் எடுக்க வேண்டும். அடுத்தபடியாகத்தான் காலரா நோய்க் கிருமிகளை முறிக்க 'ஆன்டிபயாடிக்' மருந்துகள் தரவேண்டும்.

திருவிழா, புனித யாத்திரை போன்ற ஜன நெரிசல் அதிகமுள்ள இடங்களுக்குச் செல்வோருக்கு, காலரா தடுப்பூசி போட அரசாங்கத்தின் சுகாதார அதிகாரிகளே ஏற்பாடு செய்வார்கள் — இவ்விடங்களில் பாதுகாக்கப்பட்ட குடிநீர் கிடைக்காமல் போகக்கூடும்; தொற்றுநோய்க்கிருமிகளைத் தாங்கிய பலர் வரக்கூடும் — என்பதால்.

தற்போது ஏற்பட்டுள்ள காலரா கலவரத்தைச் சமாளிக்க, சென்னை கிங் இன்ஸ்டிடியூட் புதுதில்லிக்கு மட்டும் ஆறு லட்சம் தடுப்பூசி மருந்துகளை அனுப்பியுள்ளது. கர்நாடகத்துக்கு இரண்டரை லட்சம், குஜராத்துக்கு இரண்டு லட்சம் என்று பட்டியல் நீள்கிறது. கிங் இன்ஸ்டிடியூட்டைப் போன்ற இதர இன்ஸ்டிடியூட்களும் தடுப்பூசி மருந்தை நாடெங்கிலும் அனுப்பிய வண்ணம் உள்ளன.

சென்னை கிங் இன்ஸ்டிடியூட்டில், மலைப்பிரதேசங்களிலுள்ள சீதோஷ்ண நிலையைப் போல் செயற்கை முறையில் கட்டுப்படுத்தப்பட்ட சீதோஷ்ண நிலையில், தடுப்பூசிகள் தயாராகின்றன. இனாபா, ஒபாவா என்று காலராவில் இருவகை உண்டு. இந்த இருவகைக்குரிய கிருமிகளையும் சம அளவில் கலந்து தடுப்பூசிகள் தயாரிக்கப்படுகின்றன. ஒரு சி. சி. தடுப்பூசி மருந்தில் சுமார் பன்னிரண்டு மில்லியன் கிருமிகள் இருக்கும். ஒவ்வொரு நபருக்கும் அரை சி. சி. மருந்து, ஊசி மூலம் செலுத்தப்படுகிறது.

ஊசி போட்ட இடத்தைச் சுற்றி, வலி, வீக்கம் ஏற்படக்கூடும், இரண்டு நாட்களுக்கு லேசாக ஜுரம் வரக்கூடும். மிகச் சிறிய கைக் குழந்தைகளுக்குக் காலரா தடுப்பூசி போடுவது விரும்பத் தக்கதல்ல. இத்தகைய குழந்தைகளை நோயிலிருந்து காக்க, சுத்தமான உணவையும், பத்து நிமிடங்கள் தொடர்ந்து கொதிநிலை நீடிக்கும்வரை காய்ச்சி, ஆற வைத்த நீரையும் கொடுத்தால் நல்லது.

பெரியவர்களும் கூடுமானவரை சுகாதாரக் குறைவான இடங்களில் உணவோ பானங்களோ அருந்தாமல் இருப்பது நல்லது. ஹோட்டல்களில் பரிமாறுவோர், கைவிரல்களை டம்ப்ளர்களுள் முக்கியபடி தண்ணீரை எடுத்து வருவது சகஜமான காட்சி. மிகச் சுலபமாகக் காலரா பரவும் வழி இது.

கழிப்பறைகளைக் கிருமிநாசினி கொண்டு கழுவுவதோடு, கழிப்பறைக்குப் போய் வந்தபின் கைகளை நல்ல சோப்பு போட்டுக் கழுவுவதையும் வழக்கமாக்கிக் கொள்ள வேண்டும். ஹோட்டல் பணியாளர்கள் இந்தச் சுகாதார முறைகளைக்கையாளாவிட்டால் கிருமிகளை எளிதில் பரப்பிவிடுவார்கள்.

தடுப்பூசி போட்டுக் கொண்டால் ஆறு மாதங்களுக்குப் பாதுகாப்பு கிடைக்கும். அதன் பிறகு மீண்டும் காலரா வருவதற்கான வாய்ப்பு இருக்கிறது. ஒரு முறை காலரா வரப்பெற்றவர்கள் மீண்டும் அந்த நோயால் பாதிக்கப்படவும் கூடும்.

நிரந்தரத் தீர்வுக்கு வழி பொது சுகாதாரத்தை மேம்படுத்துதலும், நூறு சதவிகிதம் பாதுகாக்கப்பட்ட குடிநீர் விநியோகமும் தான். இதை அடைய அரசாங்கத்தை எதிர்நோக்குவதைத் தவிர வேறு வழி இல்லை!

தகவல்கள்: **டாக்டர் கே. ரகுராம்**

தொகுப்பு: **எஸ். வி. என்.**


துப்பறியும்
சூர்யா-கிரண்
நவின் பிரதாப் முல்லிக்


கமிஷ்னர் ஸார்! கல்தானைப் பிடித்து விட்டோம்!


கடலில் அவன் எறிந்த காகிதங்களையும் மீட்டு விட்டோம்.


நல்லது. காகிதங்களை அனுப்பி வை.


இந்தத் தாளில் ஒரு துபாய் வங்கியின் முத்திரை இருக்கிறது. ஆனால் தொகை, நீரில் நனைந்ததில் அழிந்துவிட்டது.


இதை நிபுணரிடம் அனுப்பு.




கவனமாய்ப் பரிசோதித்தேன். ஏழு கோடி டாலர் வங்கியில் கட்டப்பட்டிருக்கிறது. ஆனால் கணக்கு வைத்திருப்பவர் பெயர் [ரசீதில்] வெட்டி நீக்கப் பட்டிருக்கிறது.


கல்தானுடைய வங்கிக் கணக்குத்தான்.


இந்தக் கணக்கு பற்றி ஆராயுமாறு துபாயில் நமது தூதரகத்துக்குச் செய்தி அனுப்பு.
இது கல்தானின் பணம் என்றால் சல்லிக்காசுகூட எடுக்க முடியாதபடி உத்தரவு போட வேண்டும்.
3
(தொடரும்)

# விவசாயப் புரட்சிக்கு வித்திடும் பண்ணை

''**நா**ங்க மாகரல் கிராமத்துலேரிருந்து வந்திருக்கோங்க.... ஜே 13 வாங்கிட்டுப் போகலாம்னு வந்தோம்....''

''அப்படியா! சந்தோஷம்! மாகரல்ங் கறது...?''

''காஞ்சிபுரத்திலிருந்து நாற்பது கிலோ மீட்டர் தூரத்துல இருக்குங்க....''

''அடேயப்பா அவ்வளவு தூரத்து லேருந்து வந்திருக்கீங்க... ஒரு கார்டு போட்டிருந்தா பதில் எழுதியிருப்போமே.''

''இல்லைங்க, எங்களுக்கு ஜே 13 இப்ப அவசியம், அவசரமா வேணும். அக்கம் பக்கத்துல எல்லாம் கிடைக்கலை. நீங்க தான் உதவி பண்ணனும்.''

''அடடா! நாங்க விற்பனைக்குன்னு வச்சிருந்த ஜே 13 முழுக்கத் தீர்ந்து போச்சே. இருந்தாலும் எங்க சொந்த உபயோகத்துக்கு வச்சிருக்கிறதுல கொஞ்சம் தர்றோம். ஆனால் நீங்க போட்டு எல்லாருக்கும் குடுக்கணும். செய்யறதா உத்தரவாதம் குடுத்தா தர்றோம்.''

''கண்டிப்பா கொடுக்கறோங்க...''

''நல்லது! ஆபீஸ் ரூமுக்குப் போய் அஞ்சு கிலோ நான் தரச் சொன்னேன்னு கேட்டுப் பணம் கட்டிட்டு வாங்கிக்குங்க.''



மேற்படி உரையாடல் நடைபெற்றது சென்னையிலிருந்து சுமார் முப்பது மைல் தூரத்தில் உள்ள ஜே பண்ணையில். (பழைய மகாபலிபுரம் பாதையிலிருந்து வண்டலூருக்குப்பிரியும்கிளைச்சாலையில்உள்ளது ஜே பண்ணை.)

ஜே 13 — ஐத் தேடி வந்தவர் ஒரு சிறு விவசாயி.

அது என்ன ஜே 13 என்கிறீர்களா? அது தான் ஜே பண்ணையில் உருவாக்கப் பட்டுள்ள புதிய, குறுகிய கால நெல் ரகம். மற்ற நெல் ரகங்கள் 120 முதல் 160 நாட்கள் வரை எடுத்துக் கொள்ள, நூறே நாட்களில் அறுவடைக்குத்தயாராகிவிடும் இந்த ரகத்தை எந்தப் பருவத்தில் வேண்டுமானாலும்பயிரிடலாம். குறைந்த செலவில் நிறைந்த மகசூலை அளிக்கும் சிறந்த நெல் ரகம் என்று பரவலாக அங்கீகாரம் பெற்றிருக்கிறது.

ஜே பண்ணையில் உருவாக்கப் பட்டுள்ளதால் ஜே 13 என்று பெயர் சூட்டப் பெற்ற இந்த ரகத்தின் பூர்வீகம் பிலிப்பைன்ஸ் நாடு. அங்குள்ள International Rice Institute இலிருந்து தருவிக்கப்பட்ட பதினேழு வளர் வகைகளைச் (seedcultures) சோதித்துப் பார்த்ததில் பதின்மூன்றாம் எண் ரகமே



• மாகரலிலிருந்து வந்த விவசாயிகள் பண்ணை அலுவலரிடம் ஆலோசனை கேட்கிறார்கள்.

எல்லாப் பருவங்களுக்கும் மண்வாகுகளுக்கும் ஏற்ற ரகமாகக் கண்டறியப்பட்டது. அந்த ரகத்தைத் தக்க முறையில் பயிர் செய்து விதைக்க விட்டு, பொருளாதார ரீதியிலும் வியாபார ரீதியிலும் நல்ல ரகமென்று ஊர்ஜிதப்படுத்தி, ஜே 13 என்று அதற்கு நாமகரணமும் செய்து, அதனைப் பரவலாகக் கிடைக்கச் செய்த பெருமை ஜே பண்ணையையே சாரும்.

சென்ற ஆண்டு ஜே பண்ணையிலிருந்து ஜே 13 வித்துக்களைப் பெற்றுச் சென்ற காந்திகிராம் பல்கலைக்கழகத்தினர் அதன் அருமைபெருமைகளை வெகுவாகப்புகழ்ந்து ஜே பண்ணைக்குக் கடிதம் எழுதியுள்ளனர். ஜே 13 ஐப் பிரபலப்படுத்திச் சுற்று வட்டாரத்து விவசாயிகளிடம் விதைகளை வினியோகிக்கப்போவதாகவும் குறிப்பிட்டுள்ளனர்

விவசாயி, வியாபாரி, நுகர்வோர் என்று எல்லாத் தரப்பினரையும் திருப்திப்படுத்தும் குணம் படைத்த ஜே 13 இன்று தமிழ்நாடெங்கிலும்சுமார் ஒருலட்சம்ஏக்கர் பரப்பில் பயிரிடப்பட்டு வருகிறது.

மேட்டூரில் நீர்மட்டம் குறைவாக இருப்பதால் தஞ்சை மாவட்ட விவசாயிகளை ஒரு போகம் மட்டுமே பயிர் செய்யும்படி தஞ்சை கலெக்டரே அறிவுரை கூறியுள்ள இத்தருணத்தில்தான் ஜே 13 போன்ற குறுகிய கால நெற்பயிரின் அருமை பெருமைகளை நன்கு உணரலாம். இதனைப் பயிரிடுவதால் நூறு நாட்களுக்குள் ஒரு மகசூல் பெற்று அடுத்த சாகுபடியையும் மேற்கொள்ள நிறைய சாத்தியக்கூறுகள் உள்ளன என்று கூறுகிறார்கள் ஜே பண்ணையில்.

நாங்கள் ஜே பண்ணைக்குச் சென்றிருந்த போது, ஜே 13 விதைகளை வாங்க வந்த மாகரல் விவசாயியைப் போலவே பல சிறு விவசாயிகள் எந்தெந்த பயிர்களை விளைவிக்கலாம்,என்ன முறைகளைக் கடைப்பிடிக்கலாம் என்று அறிவுரை கேட்க வந்தனர்.

''நீங்கள் சொன்னது போலவே எள்ளு போட்டோமுங்க. நீங்க உத்தரவாதமா சொன்ன எட்டு மூட்டையைக் காட்டிலும் இரண்டு மூட்டை அதிகமாகவே கிடைச்சிருக்கு. போன வாரம் பெய்த மழையில் நல்லா உழவு ஓட்ட முடிந்தது. அடுத்தபடியா என்ன போடலாம்னு கேட்டுக்கத்தான் வந்தேன்'' என்றார் ஒருவர்.

''ஏங்க, சூரியகாந்தி போட்டா நல்ல லாபம்கிடைக்கும்னு சொல்றாங்களே. அதை எப்ப, எப்படி பயிர் செய்யலாம்னு கொஞ்சம் சொல்லுங்களேன்...'' — இது மற்றொருவர்

''போன முறை கடலை போட்டேனுங்க காய் சரியாவே புடிக்கலை. உங்க பண்ணையில காண்பிச்சாங்க— காய் நல்லா புடிச்சிருக்கு; நல்ல தேறின காயாகவும் இருக்கு அதுக்கு என்னங்க பண்ணனும்?'' — இது மூன்றாமவர்.

இப்படி ஒவ்வொரு சிறு விவசாயியும் எழுப்பிய கேள்விகளுக்கெல்லாம் மிக மிகப் பொறுமையுடனும் ஈடுபாட்டுடனும் விளக்கமாகப் பதிலளித்தார் ஜே பண்ணையின் தலைமை விவசாயப்—பொருளியல் வல்லுனர் எஸ். எஸ். நாகராஜன். சந்தேகங்கள் தீர்க்கப்பட்டு விவசாயிகள் திருப்தியுடன் விடை பெறுவதைக் கண்டோம்.

''அனுசரணை ஆராய்ச்சியே ஜே பண்ணையின் முக்கியமான நோக்கம்'' என்றார் நாகராஜன்.

''அனுசரணை ஆராய்ச்சி என்றால்...''



• டிராக்டரின் இணைப்பு உபகரணங்கள்.

# ஜே-13 100 நாள் நெல் 'J'-13 SHORT TERM CROP

• ஜே — 13.



• டிராக்டரை உபயோகிக்கப் பயிற்சி.

"அயல் நாடுகளில் விஞ்ஞான ரீதியாக நிறைய ஆராய்ச்சிகள் செய்யப்பட்டு விவசாயத் துறை நிறைய முன்னேறியிருக்கிறது. நாமும் அவ்வப்போது அயல் நாடுகளிலிருந்து விஷய தானம் பெறுகிறோம். ஆனால் அங்கிருந்து பெறும் ஆலோசனைகளையும் அறிவுரைகளையும் பயிர் செய்யும் வழி முறைகளையும் நாம் அப்படியே கடைப்பிடித்தால் அவை முற்றிலும் நல்ல பலனைத் தரமாட்டா. நமது நாட்டிற்கு, அல்லது பிரதேசத்திற்கு ஏற்ப, சீதோஷ்ணத்துக்கு ஏற்ப, மண் மற்றும் தண்ணீர் வளங்களின் தன்மைக்கு அனுசரணையாக அம் முறைகளை நாம் மாற்றி வடிவமைத்துக் கொள்ள வேண்டும். அப்படி உருவாக்கப்பட்டது தான் ஜே 13 நெல் ரகம்.

"அயல் நாட்டு முறைகளை மட்டுமே அனுசரணை ஆராய்ச்சிக்குப் பயன்படுத்துகிறோம் என்பதில்லை. நாங்களே இங்கு பல ஆராய்ச்சிகளை மேற்கொண்டு அனுபவ பூர்வமாகச் சில உண்மைகளை ஊர்ஜிதப் படுத்தியிருக்கிறோம். எண்ணெய் வித்துக்களை இறக்குமதி செய்வதில் நம் நாடு ஏராளமான அன்னியச்செலாவணியைச் செலவிடுவதால் வேர்க்கடலை பயிரில் விசேஷ கவனம் செலுத்தியுள்ளோம். நிலக்கடலைப் பயிரை விதைப்பதற்குப் பாரம்பரியமாகக் கையாளப்பட்டு வரும் முறை ஒன்று உண்டு. ஏரை ஓட்டிச் செல்லும் விவசாயி அதன் நடத்தில் விதைகளைத் தூவியபடி வருவார். இந்த முறையைக் காட்டிலும் ridges and furrows method அதாவது பாத்தி கட்டி, ஆட்களைக் கொண்டு விதைகளைத் தனித் தனியே ஊன்றச் செய்யும் முறை மிகச் சிறந்த பலனைத் தரும் என்று கண்டுள்ளோம். சிறிது அதிகம் செலவானாலும் இவ்வாறு பயிரிடப்பட்ட செடிகள் நல்ல தேறிய காய்களை அதிக அளவில் ஈனும். (அட்டைப்படம் காண்க)

"மேலும் காய்கறிகள் பயிரிடுதல், கொய்யா மா போன்ற பழ வகைகள் ஆகியவற்றிலும் ஆராய்ச்சிகள் செய்துள்ளோம். மா சாகுபடியில் நாங்கள் ஒரு புரட்சியே செய்திருக்கிறோம் என்று நெஞ்சு நிமிர்த்திச் சொல்லலாம். மிக மிகக் குறைந்த தண்ணீரையே செலவிட்டு, மிகத் தரமான சுமார் 1700 ருமானி மாமரங்களை இருபது ஏக்கரில் வளர்த்திருக்கிறோம். ஏக்கர் ஒன்றுக்கு ஐந்நூறு முதல் அறுநூறு ரூபாய் மட்டுமே செலவிட்டு மூவாயிரம் ரூபாய் வரை லாபம் பெற முடிகிறது எங்களால்.

"ஜே பண்ணையில் நடத்தப்படும் ஆராய்ச்சிகள், பல்வேறு பிரதேசங்களுக்கு ஏற்ற பயிர்கள் என்ன என்பதைக் கண்டறிந்து அவற்றைக் குறைந்த செலவில் பயிரிட்டு, நிறைந்த மகசூல் பெறுவது எப்படி என்ற முடிவை நோக்கி அமைந்திருக்கும்.

"அப்படி முடிவு செய்வதற்கு முன்னர், விளைவிக்கப்படும் பொருளுக்கு மார்க்கெட்டில் வரவேற்பு இருக்குமா, தரத்தில் அது உயர்ந்து இருக்குமா, மற்றும் அதனைப் பயிரிடுவதால் சந்திக்கக்கூடிய பிரச்னைகள், (risks) என்ன அவற்றை எப்படிச் சமாளிக்கலாம் அல்லது சமாளிக்க முடியாது, போன்றவற்றையும் ஆராய்ந்து முடிவு செய்கிறோம்.

"இதையெல்லாம் ஆராய்ச்சிக் கூடத்தில் செய்யாமல் திறந்தவெளியில் செய்கிறோம் —விவசாயிகளுக்கு நிதர்சனமாகக் காட்டுகிறோம். அவர்கள் வந்து பார்த்துத் திருப்தியடைந்து, தாங்களும் அம்முறைகளை மேற்கொள்கிறார்கள்.

வியாபார நோக்கு இன்றி ஏராளமான ஆராய்ச்சிகள் செய்து, சிறு விவசாயிகளின் நலனுக்காக இலவச ஆலோசனையும்குறைந்

தபட்ச விலையில் விதைகளையும் வழங்கி வரும் ஜே பண்ணையின் வரலாறு சுவையானது.

'டாஃபே' என்ற டிராக்டர்கள் மற்றும் விவசாயக் கருவிகள் தயாரிக்கும் நிறுவனத்தைத் தோற்றுவித்த தொழிலதிபர் அனந்தராமகிருஷ்ணன் ஒரு முறை மஹாபலிபுரம் செல்கையில் தாகத்திற்கு இளநீர் பருக ஒரு கிராமத்தில் நிறுத்தினார். அவ்விடத்தில் நிலம் விலைக்குத் தரப்படவுள்ளதை அறிந்து அதைவாங்கிப் போட்டார். டிராக்டர்களைச் சோதித்துப் பார்க்கவும் வாடிக்கையாளர்களுக்குச் செயல்முறை விளக்கம் காட்டவும் பயன்படும் என்ற நோக்கில் வாங்கப்பட்ட அந்த நிலம் அனந்தராமகிருஷ்ணனின் மனத்தில் உருவான ஒரு கனவுக்குச் செயல் வடிவம் கொடுக்கவும் உதவியது. சிறு விவசாயிகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த ஏதேனும் செய்ய வேண்டும் என்ற அவரது நீண்ட நாள் ஆசையை நிறைவேற்றியது. அவரது தாகத்தைத் தீர்த்த அந்த பூமி இன்று பல லட்சம் பேரின் பசி தீர வழி சொல்லித் தருகிறது. பயிர் வகைகளில் ஆராய்ச்சி செய்தல், புதிய வகைகளை அறிமுகப் படுத்துதல், பயிர் சுழற்சி மற்றும் பயிரிடும் முறைகளைப் பற்றி ஆலோசனை வழங்குதல் போன்றவற்றைக் கடந்த நாற்பது ஆண்டுகளாகச் செய்து வருகிறது ஜே பண்ணை. அதனைத் தோற்றுவித்த அனந்தராமகிருஷ்ணன் மூன்று ஆண்டுகளுக்கு மட்டுமே அதன் செயல்பாடுகளைக் காண முடிந்தது. அவர் காலத்துக்குப் பிறகு அவரது மகன் சிவசைலத்தின் கவனிப்பில் வளர்ந்தது பண்ணை. 'ஸிம்ப்ஸன்' என்ற ஆங்கிலேய நிறுவனத்தில் பணியாற்றியபோது அனந்தராமகிருஷ்ணனை ஆங்கிலேய அதிகாரிகள் 'ஜே' என்று அன்புடன் அழைப்பது வழக்கமாம். அவர் நினைவாக, அவர் ஆரம்பித்த பண்ணைக்கு 'ஜே' பண்ணை என்ற பெயர் சூட்டப்பட்டது.

டிராக்டர் வாங்குவோருக்கும் டிராக்டர் விற்பனையாளர்களுக்கும் பயிற்சி வழங்கும் நோக்கிலிருந்தும் ஜே பண்ணை விலகிவிடவில்லை. இந்தியா முழுவதிலிருந்தும் டிராக்டர் வியாபாரிகள் தங்கள் பிரதிநிதிகளை ஜே பண்ணையில் பயிற்சி பெற அனுப்புகிறார்கள். இதைத் தவிர டாஃபே நிறுவனத்தின் விற்பனைப் பிரிவு அதிகாரிகள் மற்றும் இந்தியா முழுவதிலும் உள்ள விவசாயக் கல்லூரி மற்றும் பல்கலைக்கழக மாணவர்கள் ஆகியோரும் பயிற்சிக்கு வருகின்றனர். இவர்கள் எல்லோரும் டிராக்டர் வாங்கப் போகிறார்கள் என்ற உத்தரவாதம் இல்லாவிட்டாலும், தங்கும் வசதி, மதிய உணவு, போக்குவரத்து போன்ற பல சௌகரியங்களைச் செய்து கொடுத்து இலவசப் பயிற்சி அளிக்கிறது டாஃபே நிறுவனம். இப் பயிற்சி முகாம்கள் நான்கு முதல் ஆறு வாரங்களுக்கு நீடிக்கின்றன. பயிற்றுவிக்கும் நிபுணர்கள் பல மொழிகள் அறிந்தவர்களாக இருக்கிறார்கள். டிராக்டர் மற்றும் அதன் இணைப்பு உபகரணங்களை உபயோகிப்பதற்கு மட்டுமின்றி, பராமரிக்கவும் பழுது பார்க்கவும் கற்றுத் தருகிறார்கள். இந்தப் பயிற்சிக்கென்றே சில டிராக்டர்கள் குறுக்கிலும் நெடுக்கிலும் வெட்டப்பட்டும், பாகம் பாகமாகப் பிரித்து வைக்கப்பட்டும் இருந்தன. கோவை விவசாயப் பல்கலைக் கழகம் உள்பட அனேகம் விவசாயக் கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் மாணவர்கள் பயில்வதற்கு டிராக்டர் வசதி கிடையாது. இந்நிலையில் ஜே பண்ணையில் வழங்கப்படும் பயிற்சியின் மதிப்பு பன்மடங்கு உயர்கிறது. நாங்கள் சென்றிருந்தபோது கரக்பூர் ஐ.ஐ.டியிலிருந்து ஒரு மாணவர் பயிற்சிக்கு வந்

• காய்த்துக் குலுங்கும் கத்திரிக்காய்.



• மாந்தோப்பு.



இருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. இந்தப் பயிற்சியைப் பெறப் பலநூறு மாணவர்கள் போட்டி போடுகிறார்கள். அவர்களுள் சிலரை மட்டுமே தேர்ந்தெடுத்து வெகு சிரத்தையுடன் பயிற்சியளிக்கப் படுகிறது.

தற்போது டாஃபே நிறுவனத்தின் planning மற்றும் co-ordination பிரிவின் பொது மேலாளராக உள்ள மல்லிகா ஸ்ரீனிவாசன் மூன்றாம் தலைமுறையைச் சேர்ந்தவர். சிவசைலத்தின் மகளான இவர் தமது தாத்தாவின் தீர்க்கதரிசனத்தை வியந்து போற்றினார்.

''ஜே பண்ணை அவருடைய (அனந்த ராமகிருஷ்ணன்) மனோரதம். அது நிறைவேறியதைப் பார்க்க அவர் இல்லை. சில சமயங்களில் அதற்காக நாங்கள் ஒதுக்கும் தொகை மிக அதிகமானதாக, பொருளாதார ரீதியில் தக்க பலன் தராததாகத் தோன்றும். ஆனால் லட்சிய நோக்கோடு இந்த முயற்சியில் இறங்கியதால் அந்தப் பாரம்பரிய நோக்கைப் போற்றி, செலவைப் பொருட்படுத்தாமல் தொடர்ந்து நடத்தி வருகிறோம். இன்னும் சொல்லப் போனால் இதைப் போன்ற பல பண்ணைகளை நாடெங்கிலும் ஆரம்பிக்கத் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறோம். ஏற்கெனவே பல ஊர்களில் 'shandies' என்று அழைக்கப்படும் (சந்தை என்ற சொல்லின் திரிபே இது) கூட்டங்களை நடத்தி வருகிறோம். இவற்றுக்கு வரும் விவசாயிகள் டிராக்டர்களைப் பற்றிய சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்வதோடு பயிர் முறைகளைப் பற்றிய ஆலோசனைகளையும் பெறுகிறார்கள்.'' என்றார் மல்லிகா.

விவசாயம் செழிக்கவும் வியபார ரீதியாகக் கொழிக்கவும் அடிப்படையான தேவைகள் மூன்று: உழைப்பு, விஞ்ஞான பூர்வமான அணுகுமுறை மற்றும் பொருளாதார நிர்வாகம். இவற்றுள் முதலாவது நமது விவசாயிகளிடம் நிறையவே இருக்கிறது. இரண்டாவது ஒரு சில, கல்வியறிவு படைத்த விவசாயிகளிடம் காணப்படுகிறது. மூன்றாவது நம் விவசாயிகளுக்கு அடியோடு பழக்கமில்லாத ஒன்று.

இரண்டாவது மற்றும் மூன்றாவது தேவைகள் பூர்த்தியாக வேண்டுமானால் கல்வி அறிவு பரவலாக வேண்டும். ஆனால், கல்வியறிவு சென்றடையாத இடைப்பட்ட காலத்தில் இந்த எளிய விவசாயிகளுக்கு உதவக்கூடியவை ஜே பண்ணை போன்ற அமைப்புக்கள்தான். அதன் அமைதி ததும்பும், பசுமையான சூழலில் விவசாயப்புரட்சியின்வித்துக்கள்நிறையவே ஊன்றப் பட்டிருக்கின்றன.

— சீதா ரவி

மேலட்டை வண்ணப்படங்களும் மற்ற படங்களும்:

கே. வி. ஆனந்த்.

# காம்ப்ளான் சாம்பியன்கள்!

Complan

"ஆரோக்கியமான முழுமையான உடல் வளர்ச்சிக்கு உன்னதமானது காம்ப்ளான்."

—அனிதா

Anita Sood

இந்திய நீச்சல் சாம்பியன்.

அனிதா - இன்றைய இளைஞர்களின் நீச்சல் திறமையை வளர்க்க உதவுகிறார். அவர் காம்ப்ளானை சிபாரிசு செய்கிறார். காம்ப்ளான், ஆரோக்கியமான முழுமையான உடல் வளர்ச்சிக்குப் பரிபூரண திட்டமிட்ட உணவாகும்.

நினைவிருக்கட்டும், உங்கள் வளரும் குழந்தைகளுக்கு உன்னதமானது காம்ப்ளான்.




23

மூலாதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்க்கத் தேவையில்லை

**காம்ப்ளான்®**

திட்டமிட்ட பரிபூரண உணவு

GX/45/213 TML

# வியர்க்குருவிலிருந்து நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.

## நைஸில் உபயோகியுங்கள்.
## வியர்க்குருவிலிருந்து விரைவில் நிவாரணம் பெறுங்கள்.

நைஸில் **மருந்துக்கலவையுள்ள** பவுடர். இது வியர்க்குருவின் எந்தத் தொல்லையிலிருந்தும் உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே தயாரிக்கப்பட்டதாகும். டால்கம் பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவதைத் தடுப்பதுடன், வியர்க்குரு பரவுவதனின்றும் எதிர்த்துக் காக்கிறது.

1. அளவுக்கு மீறிய வியர்வை ஏற்படுவதைத் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமளிக்கிறது.






HTA 1650

• 'சங்கரன்' — இன்று படிக்க வாய்ப்பு கிடைத்தது. நல்ல அனுபவம் என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். கதையின் விசேஷ அம்சம்: ஒவ்வொரு வாசகனும் கதையின் ஏதோ ஒரு சம்பவத்தில், கோணத்தில், நுணுக்கத்தில் தன் சொந்தக் கதையைக் காண முடியும். ஓரிரண்டு இடங்களில் விழுந்திருக்கும் சொற்கள் தனிப்பரிமாணம்கண்டு பாஷைக்கு உரமூட்டுபவையாக இருக்கின்றன. கதை ஆசிரியருக்கு என் தனிப் பாராட்டுக்கள்.

தலைப்பின் பொருத்தத்தை மிஞ்சவே முடியாது. சிவகு என்னதான் தவப்பிள்ளையாயிருந்தாலும் கடைசியில் சங்கரன்தான் ஜெயிக்கிறான். அவன் தாயார், இறந்தும் அவனுக்குச் சுமை தாங்கியாயிருக்கிறாள் என்பதை எண்ணுகையில் மனம் குமுறுகிறது. என்றாலும், உண்மை அப்படித்தானே இருக்கிறது? வாழ்க்கையின் போக்குக்கு நியாய அநியாயம் வகுக்க நாம் யார்? என்கிற பரிதவிப்பையும், சற்றுச் சிந்தித்தால் கதை வெளிப்படுத்துகிறது. எழுதியவருக்கும் தேர்ந்தெடுத்தோருக்கும் பாராட்டுக்கள்.

முகாம்: ஹோசூர். லா. ச. ராமாமிருதம்.

• சத்தியப்பிரியன் எழுதிய முதல் பரிசுக் கதை — 'சங்கரன்' உள்ளத்தை அள்ளியது. கதைக் களம் பூராவும் வாசகனின் கண்முன் எப்படி எல்லாம் நிழலாடுமோ அதை அப்படியே சித்திரித்திருந்தார் ம. செ. அச்சுக் கோப்பு, கதை அமைப்பு எல்லாமே வெகு நேர்த்தியாக இருந்தன.

அரும்பாக்கம், மாயன்.

• மக்களைப்பாதுகாக்கவேண்டியவர்கள்போலீஸார். போலீஸாரைத் திருத்த வேண்டியவர்கள் ஆட்சியாளர்கள்; ஆட்சியாளரை விரட்ட வேண்டியவர்கள் யார்? மக்கள்தான்! இதனைப் புரிந்துகொண்டு மக்கள் எதிர்காலத்தில் உரிய தலைவர்களுக்கே வாக்களிக்க வேண்டும் என்று தெளிவாக எடுத்துரைத்த இவ்வாரத் தலையங்கம் என்னைப் பெரிதும் கவர்ந்தது.

லால்குடி. எம். ராஜேந்திரன்.

• சென்னை மூர்மார்க்கெட் அருகே மிகப் பெரிய நட்சத்திர ஓட்டல் கட்டுவதற்குப் பலமான எதிர்ப்பைப் பகிரங்கமான கடிதம் மூலம் எழுப்பிய 'கல்கி'யின் குமுறல் குரல் மேதகு ஆளுனரின் நெஞ்சத்தைக் கிள்ளிவிட்டது போலிருக்கிறதே! 3.8.88 அன்று மேதகு ஆளுனர் அவர்கள் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில், ''புகார்களில் உள்ள உண்மைகளை ஆராயும் வரை ஓட்டல் கட்டும் ஆரம்ப வேலைகள் நிறுத்தி வைக்கப்படும்'' என்று திட்டவட்டமாகத் தெரிவித்துள்ளார். இது 'கல்கி'யின் எதிர்ப்புக் குரலுக்குக் கிடைத்த மாபெரும் வெற்றி என்றே சொல்ல வேண்டும். சபாஷ் கல்கி!

திருநெல்வேலி — 7. எஸ். கலைவாணன்.

• 'வாழக் கற்றுத்தரும் பல்கலைக் கழகம்' கட்டுரை படித்ததும் அங்கு சென்று படிக்க வேண்டும் போல் ஓர் உணர்வு ஏற்படுகிறது. அங்குள்ள மாணவர்கள் 'எளிமையும், மனித நேயமும், உலகளாவிய பார்வையும் கொண்டவர்களாகவே வெளிவேறுகிறார்கள்' என்ற வரிகள் ஒவ்வோர் இந்தியக் கல்வி நிறுவனத்துக்கும் பொருந்தாதா என்ற ஏக்கம் ஏற்படுகிறது.

பையூர். இரா. சேகர்.

• இமயத்தின் பனிமூடிய சிகரங்களைத் தழுவி வந்த காற்று, நம்மையும் தழுவி ஒரு ஜில்லிப்பான சிலிர்ப்பையூட்டுமே, அப்படியொரு சிலிர்ப்பை 'இமயத்தின் மடியில் இரண்டு நாட்கள்' என்ற கட்டுரை ஏற்படுத்தியது.

சென்னை — 15. எஸ். அருண்குமார்.

• இமயத்தின் மடியில் எடுத்த வண்ணப்படங்கள் அப்பகுதிகளை இதுவரை பார்க்காதவர்களைப் பார்க்கும்படியும், பார்த்தவர்களை மறுபடியும் பார்க்கும்படியும் தூண்டும் வண்ணம் இருந்தன. கண்களுக்கு நல்ல குளிர்ச்சி!

குத்தாலம், வி. சுந்தரராமன்.




• 'கதைச் சுருக்கம்' போல் எளிதாக யாவரும் புரிந்து கொள்ளும்படியாகக் கூர்க்காலாந்து பிரச்னையை, ஒரு பேட்டி மூலமாக எடுத்துக் கூறியது மிகவும் அருமை.

சென்னை — 4. டி. க. ஸ்ரீராம்.

• சுதந்திர உணர்ச்சியும், தேசியப்பற்றும் கொஞ்சம் கொஞ்சமாகக் கானல் நீராகி வருகின்ற இந்தக் கால கட்டத்தில் கல்கி அவர்களின் 'அமர வாழ்வு' கதையை வெளியிட்டது மிகப் பொருத்தமே.

திருக்கடையூர். ஜி. கே. ராஜு.

• அமரர் 'கல்கி' அவர்களின் 'அமர வாழ்வு' குறுநாவலை, பல ஆண்டுகளுக்குப் பின் மீண்டும் படித்துச் சுவைத்தேன். இப்போது படித்த போதும் ஏதோ புதிய படைப்பைச் சுவைத்தது போன்ற இன்பம் ததும்பியது. நம் நாடு விடுதலை பெற்ற 40—வது ஆண்டு நிறைவின் சமயம் இந்தக் குறுநாவல் மீண்டும் வெளியாவது மிகவும் பொருத்தம் மட்டுமல்ல, இளைய தலைமுறையினருக்கு எழுச்சி ஊட்டுவதாகவும் உள்ளது.

சென்னை — 18. புத்தனேரி சுப்பிரமணியம்.

• 31.7.88 தேதியிட்ட 'கல்கி'யில், 'பெற்றால்தான் பிள்ளையா?' என்ற கட்டுரையை வெளியிட்டிருந்தீர்கள். அதில் தனியாகப் பிரசுரமாகியிருந்த சட்டக் குறிப்பில், ஒரு குழந்தையைக் கணவன் தத்து எடுத்துக் கொள்வானானால், அதற்கு மனைவியின் சம்மதம் தேவையில்லை என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். இது தவறானது. தற்போதைய சட்டத்தின்படி, கணவன் தத்து எடுக்க விரும்பினால், மனைவியின் மனப்பூர்வமான சம்மதம் கட்டாயம் வேண்டும். இதனை ஒரு வழக்கறிஞர் என்கிற முறையிலும், கர்ணபிரயாகின் சட்ட ஆலோசகர் என்ற முறையிலும் கூற விரும்புகிறேன்.

சென்னை — 28. கௌசல்யா பாலச்சந்தர்.




# கல்கி

1988 ஆகஸ்ட் 21
மலர் 47 இதழ் 3
விபவ ஆவணி 5




## ஏழு கட்சிகளின் எழுச்சி ராஜீவின் வீழ்ச்சியாகுமா?

பஞ்சாப் பயங்கரவாதிகள் வைக்கும் குண்டுகளைக் காட்டிலும், விடுதலைப் புலிகள் வைக்கும் கண்ணி வெடிகளைக் காட்டிலும் பலமாக வெடித்து ராஜீவ் அரசுக்கு மிகுந்த சேதத்தை விளைவித்துக் கொண்டிருப்பவை லஞ்ச — ஊழல் குண்டுகளே! போஃபோர்ஸ் லஞ்சம், நீர்மூழ்கி பேரம், ஃபேர்ஃபேக்ஸ் விவகாரம் இவற்றைத் தொடர்ந்து இப்போது ஹெலிகாப்டர் ஊழலும் ஜப்பானிய நிறுவனம் ஒன்றினிடம் பெறப்பட்ட கமிஷன் விவகாரமும் அம்பலத்துக்கு வந்துள்ளன. எண்ணெய் மற்றும் இயற்கை வாயுத் துறையினருக்குக் கடலில் எண்ணெய்க் கிணறுகள் தோண்டும் பணிகளையொட்டி பன்னிரண்டு ஹெலிகாப்டர்கள் தேவைப்பட்டன. இவை கடைசியில் நாற்பத்திரண்டு ஹெலிகாப்டர்களாக எண்ணிக்கையில் உயர்த்தப்பட்டன. தவிர, 'வெஸ்ட்லாண்டு ஹெலிகாப்டர்கள் தரமானவையல்ல, அவற்றைவிடச் சிறந்தவை உள்ளன' என்று தரப்பட்ட பல நிபுணர்களின் அபிப்பிராயங்கள் ஒதுக்கித் தள்ளப்பட்டன. வெஸ்ட்லாண்ட் நிறுவனத்துக்கே ஆர்டர்கள் தரப்பட்டன. ஏன்? எதற்காக? இதன் பின்னணியில் இருப்பது யார்? பிரிட்டிஷ் நாடாளுமன்றத்திலேயே இதுபற்றிக் கேள்விகள் எழுப்பப்பட்டு இந்தியாவின் மானம் கப்பலேறியது. போதாக்குறைக்குப் பாதுகாப்பு அமைச்சகத்திலே 'ஐம்பது ஃபைல்களைக் காணோம், அறுபதைக் காணோம்' என்ற செய்திகள் வேறு! இவற்றைவிட மோசம், பிரதமரின் அலுவலகத்திலேயே முக்கிய பதவி வகிக்கும் ஒருவருக்கும் ஜப்பானிய நிறுவனம் ஒன்றுக்கும் உள்ள தொடர்பு. தொழில் நுணுக்கமோ, வியாபாரமோ அறியாத பெண்கள் இருவர் பாகஸ்தர்களாக இருந்து ஒரு நிறுவனத்தை ஆரம்பித்து நடத்த, அதற்கு ஜப்பானிய நிறுவனம் ஆறரைக் கோடி ரூபாய் தந்திருக்கிறது. அதுவும் அயல்நாட்டு வங்கியில் சட்டவிரோதமாகச் செலுத்தப்பட்டிருக்கிறது. இந்தியாவில் வரி செலுத்தும் பல கோடிக்கணக்கான மக்களின் வயிற்றிலடித்துப் பெறப்படும் இந்தப் பணம் எதற்காக? யார் இதுபோன்ற அநீதிகளின் பின்னணியில் இருந்து ஊக்குவிப்பது? சில காலமாகவே தேர்தல் நன்கொடைகளுக்கு இந்தியத் தொழிலதிபர்களை நம்பியிருக்க முடியாது என்று இ. காங்கிரஸ் தீர்மானித்து விட்டிருப்பதை இந்தச் சூழலில் வைத்துப் பார்க்க வேண்டும்.

இத்தகைய ஓர் அவலமான சூழ்நிலையில்தான் ஏழு கட்சிகள் ஒன்று கூடி, தேசிய முன்னணி என அமைத்துத் தேர்தலைச் சந்திக்கத் தீர்மானித்துள்ளன. தங்களுக்கு ராஜீவை முறியடிப்பது மட்டுமே நோக்கமாக இராது எனவும், தாங்கள் அனைவரும் ஏற்கத்தக்க அடிப்படைக் கொள்கைகள் வகுக்கப்படும் என்றும், செயல்திட்டம் அமையும் என்றும் இவர்கள் உறுதி அளித்துள்ளனர். ஆனபோதிலும் ஜனதா ஆட்சி அல்பாயுசில் முடிந்து போன சமீப சரித்திரம் நம் மனத்தில் சந்தேக விதைகளை ஊன்றவே செய்கிறது. பல்வேறு கட்சிகளைச் சேர்ந்த தலைவர்கள் தங்கள் சுயநலனைவிடப் புதிய கட்சியின் நலனைப் பெரிதாக நினைப்பார்களா? தங்கள் சொந்தச் செல்வாக்கை இழந்தேனும் தேசத்தின் செல்வாக்கை உயர்த்த முன்வருவார்களா? கேள்விக்குறிகள் அழுத்தமாக விழுகின்றன.

இருப்பினும் ராஜீவின் ஒரு யதேச்சாதிகாரப் போக்குக்கும் ஆற்றலின்மைக்கும் (எடுத்துக்காட்டுக்களை மீண்டும் பட்டியல் போட அவசியமில்லை; அனைவரும் அறிந்தவையே) இந்தப் புதிய கட்சி ஒரு சவாலாக அமையும் என்பதில் ஐயமில்லை. புதிய கட்சி நிலையான அரசைத் தருமா என்பதைவிட, ராஜீவ் தலைமையிலான காங்கிரஸுக்கு ஓர் அதிர்ச்சி வைத்தியம் செய்தால் அதுவே கூட வரவேற்கத் தக்கதுதான். 'ராஜீவின் தலைமையின் கீழ் நாம் தோற்றுத்தான் போவோம்' என்று காங்கிரஸ்காரர்கள் பலரே இன்று கருத ஆரம்பித்திருப்பது உண்மை. நம்பிக்கை இழந்து சோர்ந்திருப்பது நிஜம்.

காலம் காத்திருப்பதில்லை. அடுத்த சில மாதங்களுக்குள் ராஜீவ் தம்மைச் சிறந்த ஜனநாயகவாதியாகவும் நேர்மையாளராகவும் நிரூபித்துக் கொண்டு, மக்கள் முன் மிகச் சிறந்த லட்சியம் ஒன்றைச் சமர்ப்பித்து, நாட்டை முன்னேற்ற அவர்கள் ஒத்துழைப்பைக் கோரிப் பெற வேண்டும். மக்களைத் தட்டியெழுப்புவதுடன் தம்மையும் உற்சாகப்படுத்திக் கொண்டு ஊக்கமுடன், லட்சிய நோக்குடன் அவர் செயல்படாவிட்டால் அவரை மக்கள் நிராகரிப்பது நிச்சயம்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.







''வீட்டில் உங்க மனைவியோடு இரைந்து சண்டை போட்டுக் கொண்டிருந்தீங்களே, என்ன விஷயம்?''

''பின்ன, என்ன ஸார்! வீட்டில் சமையல் செய்றது நான்; அந்தக் குறிப்பையெல்லாம் பத்திரிகைக்கு அனுப்பிப் பரிசு பெறுவது அவ!''

— வாசி—ஜான்.

அவர்: குழந்தையை நானும் சைக்கிள் ரிக்ஷாவிலே பள்ளிக்கூடம் கூட்டிப் போகணும்; மாசத்திற்கு என்ன கேட்கிறே?

ரிக்ஷாக்காரன்: குழந்தையை அழைச்சுப் போக மாசம் முப்பது ரூபா கொடுங்க. புத்தகப் பையும் கூடக் கொண்டு போகணுமுன்னா எடைக்குத் தகுந்தாப்பலே ரேட் பேசிக்குவோம்!

— கே. ரத்னம்.

''வாங்க அண்ணே! ஓட்டலுக்குப் போய் ஆளுக்கொரு காப்பி சாப்பிட்டு வருவோம்!''

''என்கிட்டே பணமில்லையப்பா...!''

''அதுக்கென்ன போங்க. அடுத்த தடவை சாப்பிட்டுக்குவோம்!''



''என் மனைவியை நேற்று துணிஞ்சு திட்டிட்டேன்!''

''எப்படி?''

''என் கனவுல தூங்கிக்கிட்டு இருந்தா. இதுதான் சமயம்னு திட்டித் தீர்த்துட்டேன்!''

— சடுவை கோபால்சாமி.

''உன்னோட காதலிகளிடம் உன் நண்பர்கள் லவ் லெட்டர் கொடுக்கிறதாச் சொல்றியே! உன் நண்பர்களுக்கு நாகரிகம் தெரியாதா?''

''தெரியாம என்ன? அவளை நான் திருமணம் செய்துக்கப் போறதில்லைன்னு சொன்ன பிறகுதான் தர்றாங்க!''

— மணியன் தர்மலிங்கம்.





# இது நம்ம ஆளு

காதலுக்கு ஜாதி ஒரு பிரச்னை என்பது தமிழ் சினிமாவிற்காக அந்தக் காலத்திலேயே கல்வெட்டில் பொறித்த விஷயம். பாக்யராஜ் இதே விஷயத்தை வேறு கதவு வழியே அணுகியிருக்கிறார். இங்கு காதலில் பிரச்னை இல்லை. கல்யாணம் ஆனதும் வெடிக்கிறது பூகம்பம். புருஷன் தனியே. பெண்டாட்டி தனியே. காரணம்? ஜாதி. ஜாதி. ஜாதி.

கணவன் மனைவிக்கு இடையில் இருக்கும் மென்மையான கூடல், ஊடல், காதல், தாகம் எல்லாவற்றையும் கான்வாஸில் வரைந்து பின்னால் தொங்கவிட்டு, முன்னணியில் ஜாதிப் பிரச்னையைக் கத்தியால் சுரண்டிப் பார்த்திருக்கிறார் பா. ராஜ்: புத்திசாலித்தனமாக. காட்சிகளைப் பாருங்களேன்; பாக்யராஜ் எடுத்துக் கொண்டிருக்கும் ரிஸ்க் புரியும்.

நாவிதர் மகன் பிள்ளையாரைச் சாட்சி வைத்துத் திருட்டுப் பூணூல் அணிகிறான். 'அய்யர் ஆத்து' அவுட்ஹவுஸில் ஜாதி மறைத்துத் தங்கி, அக்ரகாரத்திற்கு வேண்டப்பட்டவனாகிறான். கோயிலில் திருடிய குருக்கள் அவமானப்பட்டுப் பூணூலை அவிழ்த்து எறியும் போது தடுத்து, அவருக்கே அணிவிக்கிறான்.

மனோரமா கோல்டு. ஓல்டு ஆக ஆக மதிப்பு. அய்யராத்து மாமியுடன் தெருவில் நடந்து கொண்டே, ராத்திரி விஷயங்களைப் பற்றிக் கொஞ்சம் நக்கல், கொஞ்சம் குறும்பு எல்லாம் கலந்து வெட்டித் தள்ளுகிறார். ஷோபனா பத்மினி சாயலில் சிரிக்கிறார். எங்கேயோ, ஸ்ரீதேவியையும் ஞாபகப்படுத்துகிறார். சாஸ்திரிகள் வேஷத்திற்காகவே சோமயாஜுலு இத்தனை வருடம் வளர்ந்திருக்கிறார்.

க்ளைமாக்ஸில் வசனத்தாலேயே நிமிர்த்த வேண்டிய பனங்காய் வேலை பாக்யராஜிற்கு. நிமிர்த்துகிறார்.

ஜாதிப் பிரச்னை விவகாரத்தை வெற்றிலையாய் எடுத்து, நகைச்சுவைச் சுண்ணாம்பைத் தடவி, செக்ஸையும் கலந்து கனவுப் பாடல்கள், காஸ்ட்லி காஸ்ட்யூம்கள், மற்ற எட்ஸெட்ராவைப் பாக்குத் தூளாய்ச் சேர்த்துச் சுருட்டிக் கொடுத்திருக்கிறார் பாக்யராஜ்.

பல்லிடுக்கில் அங்கங்கே மாட்டிக் கொண்டு உறுத்தாமல் மட்டும் இருந்திருந்தால் மனம் விட்டே பாராட்டலாம்.

டைரக்ஷன் பாலகுமாரனாமே! அவரைத் தேடிப் பார்த்தபோது கிடைக்கவில்லை; எப்படியும் அடுத்த படத்தில் கண்டுபிடித்து விடலாம்!

— ஜெயமன்மதன்



“ஆஃப்டர் ஷேவ் லோஷன் கேட்டு
வாங்குவதில்லையா நீங்கள்?
காப்புறை வேண்டுமென்று கேட்க
மட்டும் ஏன் தயக்கம்?”

புதிய டீலக்ஸ்

லூப்ரிகேடட்
வண்ணக் காப்புறைகள்
சாலின் பூச்சுடன் பாதுகாக்கப்பட்ட
பேக்குகளில்





MOODS
SKIN THIN
LUBRICATED

3

# நீரில் மிதக்கும் நிலா

**ஷி**ல்பா காண்ட்ராக்டில் கையெழுத்துப் போட்டாள்.

அம்மாவை நினைத்துக் கொண்டாள். எவ்வளவோ தடுக்க முயன்றும் கண்களில் நீர். சுற்றி இருந்தவர்கள் பார்க்காத ஒரு தருணத்தில் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

டைரக்டர் இளங்குமரன் முதல் கைதட்டலைத் தொடங்கி வைத்தான். சுற்றி இருந்தவர்கள் சோகையாகக் கைதட்டினார்கள். பிருத்விராஜ் ஓர் ஓரமாக நின்றிருந்தான். கைதட்டலில் சேர்ந்து கொண்டான். என் மதுமதி ஸ்க்ரீனில் சிரிக்கப் போகிறாள். அழப் போகிறாள். சிணுங்கப் போகிறாள். முறைக்கப் போகிறாள். ஷில்பா நிச்சயம் மதுமதியாவதற்கு அத்தனை தகுதிகளும் கொண்டிருந்தாள்.

"போங்கப்பா. அத்தனை பேரும் வேலையைக் கவனிங்க. ஷில்பா, நீ என்ன பண்றே... நாளைக்குக் காலையில சென்ட்ரலுக்கு வந்துடறே. கோவை எக்ஸ்பிரஸ்ல புறப்படறோம். ஊட்டியில நாளன்னியிலேர்ந்து ஷூட்டிங். கண்டதைச் சாப்பிடக் கூடாது. கண்டதைக் குடிக்கக் கூடாது. படம் முடியறதுக்குள்ள உடம்புல சதை போட்டே, அவ்வளவுதான்... வேற யாரையாவது ஒரு



ஹீரோயினைத் தேடிக்கிட்டு நான் போய்டு வேன்'' என்றான் இளங்குமரன். சாய்ந்து கொண்டான். ஒரு சிகரெட்டை உருவிப் பற்ற வைத்துக் கொண்டான்.

''டைரக்டர் கால்ல விழுந்து ஆசிர்வாதம் வாங்கிக்கம்மா'' என்றார் ஜுபிடர் ரத்தினம்.

ஷில்பா இளங்குமரனுக்குத் தெரியாமல் அவனைப் பார்த்து முறைத்தாள்.

தூரத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்த பிருத்விராஜ் 'ச்சே... அப்படியே மதுமதி' என்று நினைத்துக் கொண்டான்.

''அதெல்லாம் ஒண்ணும் வேணாம். நெறைய டேக் வாங்காம, ஃபிலிமை வேஸ்ட் பண்ணாம நீ உன் வித்தையைக் காட்டு. அது போதும் எனக்கு'' என்றான் இளங்குமரன்.

ஜுபிடர் ரத்தினம் புரொடக்ஷன் மேனேஜரைத் தேடிப் போனார். கையில் அழுக்கான ஒரு நோட்புக்கைத் திறந்து வைத்துக் கொண்டு, பென்சிலால் ஏதோ எழுதி, நாக்கு ஈரத்தை விரலில் தொட்டு அழித்துக் கொண்டிருந்த சச்சிதானந்தம் ''என்ன?'' என்றான். பெல்ட் போட்டு இறுக்கியிருந்தும் அவனுடைய பான்ட் இடுப்புக்குக் கீழ இறங்கியிருந்தது. அணிந்திருந்த சட்டையில் அங்கங்கே அழுக்குத்தீவு. முழுக்கை சட்டை ஒருபுறம் நேர்த்தியாக மடித்து விடப்பட்டிருக்க, இன்னொரு பக்கம் மணிக்கட்டு வரை மடிக்கப்படாமல் தொங்கிக் கொண்டிருந்தது.

''ஷில்பாதான் இந்தப் படத்துக்கு ஹீரோயின்'' என்றார் ஜுபிடர் ரத்தினம். அவர் குரலில் பெருமையா, கர்வமா என்ன என்று சரியாகச் சொல்ல முடியாத ஒரு பாவம்.

''அதுக்கென்ன?''

''நாளைக்கு அவுட்டோருக்குப் பொறப் படணும்னாங்களே. வூட்டுக்குக் காலையில கார் அனுப்பிட்றீங்களா? கூட எம் பொண்ணுங்க ரெண்டும் வரும். அதுங்களுக்கும் சேத்து ஏ.ஸி. சேர் கார்ல டிக்கெட் புக் பண்ணிடுங்க...''

''யோவ்'' என்றார் சச்சிதானந்தம், பென்சிலைக் காதில் செருகிக் கொண்டு. ''ஒன் பொண்ணு இன்னும் ஃபர்ஸ்ட் ஸீன் கூட நடிக்கலை. அதுக்குள்ள இந்தத் தாவு தாவுற பாத்தியா? கார் எல்லாம் அனுப்ப முடியாது. நீயும் ஒம் பொண்ணும் வந்தாப் போதும். பட்டாளத்தையே கூட்டிட்டு வராதே... அனாவசியத்துக்கு ஆட்டம் போட்டே அப்புறம் பேரு ரிப்பேராய்டும். நீ சொன்னதை டைரக்டர் கிட்ட சொல்லவா?''

ஜுபிடர் ரத்தினம் அவனுடைய இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டார். ''சும்மா ஒரு பேச்சுக்கு சொன்னா உடனே கோச்சுக்கறதா? ட்ரெய்ன் எத்தினி மணிக்கு?''

''காலைல ஆறு மணிக்கு. அஞ்சரைக்கு ஸ்டேஷன்ல இருக்கணும்...''

''சரி... சரி...'' என்றார். ''பாப்பா...'' என்று ஷில்பாவைத் தேடித் திரும்பினார்.

**ஷி**ல்பா பிருத்விராஜனை நெருங்கினாள். அவள் அவனை நோக்கி ஒவ்வொரு அடியாய் எடுத்து வைக்க, பிருத்விராஜனுக்கு மதுமதியே உயிர் பெற்று எழுந்து வருகிறாற் போல் இருந்தது. என் மதுமதி இளங்குமரனின் காலில் விழவில்லை.

''ரொம்பத் தாங்க்ஸுங்க'' என்றாள் ஷில்பா.

''எதுக்கு?''

''காலத்தால் உதவி செய்தீங்க. ஞாலத்தை விடப் பெரிசு இல்லீங்களா?''

''சினிமால நடிக்கற பொண்ணுங்க எல்

சுபா

லாம் பொம்மைங்கன்னு நெனைச்சிட்டிருந்தேன். இப்பத்தான் குறள் தெரிஞ்ச ஒரு பொண்ணைப் பாக்கறேன். குறள் படிச்சிருக்கீங்களா?''

''கொஞ்சம் கொஞ்சம். நான் எதுக்கு வந்தேங்கறதையே மறக்கடிச்சிருவீங்க போல இருக்கு. நீங்க மட்டும் நான் பஸ்ல ஏறின சமயம் வந்து என் கையைப் புடிச்சி எறக்கி இருக்கலேன்னா என் சான்ஸ் போயிருக்கும். கஷ்டப்படற ஃபாமிலிதான் எங்க ஃபாமிலியும். உங்களாலதான சான்ஸ் கெடைச்சிருக்குது...''

''நான் வேணும்னே உங்க கையைப் புடிச்சி எறக்கலீங்க...''

''நான் நீங்க எங்கையப் புடிச்சதைப் பத்தியா பேசினேன். தாங்க்ஸ்தானே சொன்னேன். நீங்க இந்த யூனிட்ல என்னவா இருக்கீங்க?''

''எனக்கே தெரியலீங்க. நானும் உங்களை மாதிரிதான். நியூ ரெக்ரூட்'' என்றான்.

சிரித்தாள். சிரித்தான்.

''என் ஒரிஜினல் பேரு சாந்தா. சினிமாப் பேரு ஷில்பா.''

''என் பேரைக் கேக்கறீங்களா...? டைரக்டர் உங்க எதிர்ல ஒரு தடவை எம் பேரைச் சொல்லிக் கூப்புடலை?''

''நீங்க என்னவோ போலீஸ்காரன்கிட்ட திருடன் பதில் சொல்ற மாதிரி முணு முணுன்னு சொன்னீங்க. எங்காதில விழவேயில்ல....''

''பிருத்விராஜ்'' என்றான் பிருத்விராஜ். ஷில்பாவின் பேச்சை வியந்து கொண்டே.

''அட, நல்லாருக்குதே... அப்பா அம்மா வச்ச பேரா?''

''அனாதை ஆசிரமத்தில வச்ச பேரு'' என்றான் பிருத்விராஜ்.

''ஷில்பா... வாம்மா... ஒன்னை எங்கல்லாம் தேடச் சொல்றது. வூட்டுக்குப் போவேணாமா... துணிமணில்லாம் எடுத்து வச்சிக்க வேணாமா... ராணி, திலகாகிட்டல்லாம் சொல்ல வேணாமா...'' ஜூபிடர் ரத்தினம் பரபர குரலோடு வந்து சேர்ந்தார்.

''நாளைக்குப் பாக்கலாங்க...'' என்றாள் ஷில்பா, கண்களில் மின்னிய லேசான சோகத்துடன்.

''சரி'' என்றான் பிருத்விராஜ்.

சென்ட்ரல் ரயில்வே ஸ்டேஷன் காலை ஐந்தரைக்குக் கும்பகோண மகாமகத் திருவிழா இடம் போலிருந்தது.

பிருத்விராஜ் பிளாட்ஃபாரத்தில் இருந்த இரும்புத் தூண் பக்கம் ஒதுங்கி எம்பிப் பார்த்தான். ஷில்பா தெரியவில்லை.

புரொடக்ஷன் மானேஜர் சச்சிதானந்தம் தெரிந்தான். நேற்று போட்டிருந்த அதே சட்டை. அதே பாண்ட்.

''பிருத்வீசு... என்ன இங்க நிக்கறே..?

**நீரில் மிதக்கும் நிலா:**

**அத்தியாயம் ஒன்று:**

**ஏழை மேக்கப்மேன் ஜூபிடர் ரத்தினத்தின் இரண்டாவது பெண் ஷில்பா. சினிமாவில் ஹீரோயினாக அறிமுகமாகப் போகிறோமா இல்லையா என்ற கவலையுடன் டைரக்டர் இளங்குமரனைத் தேடிப் போகிறாள்.**

**எப்போதுமே எரிச்சலுடன் பேசும் இளங்குமரன் இப்போது மகா எரிச்சலில் இருக்கிறான். காரணம், அடுத்த படத்திற்கான கதை முடிவாகவில்லை. இளங்குமரனுக்காக, அவன் கவனிக்க மாட்டானா என்ற ஏக்கத்துடன் காத்திருக்கிறான் பிருத்விராஜ். இளைஞன். வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற நம்பிக்கையுடன் இருப்பவன். ஓர் உன்னதமான கதையை மனத்தில் திரைப்படமாக வடித்துவிட்டு, டைரக்டரின் ஒரு 'லெவல்' லுக்காகக் காத்திருக்கிறான். டைரக்டர் ஷில்பாவை ஒதுக்கி விட்டு, பிருத்விராஜை அழைக்கிறான்: 'சொல்லுய்யா உன் கதையை' என்கிறான்.**

உனக்கு ஏ.ஸி. சேர் கார்ல சீட் ரிஸர்வ் ஆயிருக்குது. டைரக்டர் ஒன்னை அவர் கூட வரச் சொல்லியிருக்காரு'' என்றான். பிருத்விராஜின் பதிலை எதிர்பார்க்காமல் பிளாட்ஃபாரத்தில் ஓடினான்.

''இதோ வந்துட்டேன்'' என்று பிளாட்பாரத்தின் முனையை நோக்கினான் பிருத்விராஜ்.

ஏறக்குறைய ரயில் கிளம்ப முதல் மணி அடித்த நேரத்தில் ஷில்பா தூரத்தில் தெரிந்தாள். பின்னாலேயே ஜூபிடர் ரத்தினம்.

ஷில்பா இரண்டு பெட்டிகளை, ஒரு கூடையைச் சுமக்க முடியாமல் சுமந்து ஓடி வந்தாள். பிளாட்ஃபாரத்தில் அத்தனை பேர் நடுவில், அத்தனை இரைச்சல்களுக்கு இடையில் ஷில்பா மட்டும் ஓடிவருகிற மாதிரி பட்டது பிருத்விராஜிற்கு. ஷில்பாவின் பின்னால் ஜூபிடர் ரத்தினம்.

பிருத்விராஜ் அவர்களை நோக்கி ஓடினான். பாதி பிளாட்ஃபாரத்தில் அவர்களைச் சந்தித்தான்.

கோவை எக்ஸ்பிரஸ் 'பாம்' என்ற தன் நீண்ட ஊளை அலறலைத் தொடங்கியது.

''ஏறுங்க... ஏதாவது ஒரு பெட்டியில ஏறுங்க... அப்புறம் ஸீட் தேடிக்கலாம்'' என்றான். அவள் கையிலிருந்து பெட்டிகளைப் பிடுங்கி ரயிலில் போட்டான். கூடையை எடுத்து ரயில் பெட்டியில் வைத்துத் தள்ளினான். ஜூபிடர் ரத்தினத்தின் பெட்டிகளை வாங்கினான். ரயிலில் வீசினான். ரயில் நகர ஆரம்பித்தது. ஜூபிடர் ரத்தினம் ரயிலில் ஏறினார். ஷில்பா ரயிலுடன் மெதுவாக ஓடி வரத் தொடங்க, பிருத்விராஜ் அவள் இடுப்பைப் பற்றித் தூக்கி ரயிலில் ஏற்றி விட்டான்.

## இதுவரை நடந்தது....

**அத்தியாயம் இரண்டு:**

**பிருத்விராஜ் கதை சொல்கிறான்:**
**மதுமதி ஒரு கீழ் நடுத்தரக் குடும்பத்துப் பெண். அழகி. சிவராமன் ஒரு மஹா பணக்கார இளைஞன். இருவருக்கும் காதல். சிவராமன் தன் காதலை மதுமதியின் அப்பா ஜகன்னாதனிடம் மிக சூசகமாகத் தெரிவிக்க, ஜகன்னாதன் சிவராமனிடம், 'நீ மதுமதிக்கு அண்ணனாக இருந்து அவளைப் பார்த்துக் கொள்ள வேண்டும்' என்று சொல்கிறார். மதுமதிக்கும் சிவ்ராமனுக்கும் அதிர்ச்சி.**
**இந்த இடத்தில் கதையை நிறுத்துகிறான் பிருத்விராஜ். இளங்குமரன் கதையின் ஆரம்பமே பிடித்திருப்பதாகச் சொல்லி ஹீரோயினாக ஷில்பாவை முடிவு செய்யும் நிலையில், ஷில்பா டைரக்டருக்காகக் காத்திருந்து காத்திருந்து ஏமாற்றத்துடன் ஜெம்பிப் போயிருக்க, பிருத்விராஜ் ஓடிப் போய் ஷில்பாவிடம், 'நீதான் என் மதுமதி' என்று அவளை அழைத்து வருகிறான்.**

'**வா**ய்யா... பிருத்விராஜா... எங்கே இவ்வளவு நேரமா ஆளைக் காணும்... ஹீரோயினை ரயில்ல ஏத்தி வுட்டியாமே... ஜாக்கிரதையா இருப்பா. ஆரம்பத்திலேயே இப்படி இருந்தேன்னா அவ்வளவுதான். பத்திரிகைக்காரனுங்க ஒன்னையும் அவளையும் கோத்து உட்டு மாய்ஞ்சி மாய்ஞ்சி கிசுகிசு எழுதுவானுங்க...''

ஓடி வந்து ஏறியதால் பிருத்விராஜுக்கு இன்னும் மூச்சிரைப்பு நிற்கவில்லை.

இளங்குமரனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தான். ஷில்பா அவளுடைய சீட்டுக்குப் போயிருப்பாளா என்று ஒரு செகண்ட் கவலைப்பட்டான். போயிருப்பாள்.

''ஒரு பத்து கட்லெட் குடுங்க... நம்ப ஆளுங்களாப் பாத்துக் குடுங்க... யார் யார் கிட்டயோ குடுத்துட்டுக் காசுக்கு நம்மகிட்ட நிக்காதீங்க. நீ வாய்யா பிருத்வி. நேத்து நிறுத்தின கதையை கன்டினியூ பண்ணு... எங்கே நிறுத்தினே ஞாபகம் இருக்கா?''

பிருத்விராஜ் அவன் கதையில் ஆழ்ந்தான்.

"**ஆ**மா சிவராம். மது சொன்னா. ஆனா இதெல்லாம் நடக்கிற காரியமில்ல. நீ எட்டாத உசரத்தில இருக்கறவன். நான் சாதாரண க்ளார்க். உங்க வீட்லயும் ஒத்துக்க மாட்டாங்க. நெறைய பிராப்ளம் வரும். ஆசை ஏன் வக்கணும்? பிரச்னை ஏன் வரணும்?''

''இல்ல சார்'' என்று அவசரமாய் மறுத்தான் சிவராமன். ''எங்க வீட்ல ஏற்கெனவே சொல்லிட்டேன். நெஜத்தைச் சொல்லணும்னா மதுவைப் பாக்கணும்னு எங்க வீட்ல துடிச்சிட்டிருக்காங்க.''

''ஸாரி சிவராம். எம் மனசுக்குப் பட்டதைச் சொன்னேன். முடிவு உங்க ரெண்டு பேர் கிட்டத்தான் இருக்கு... ஏன்னா லைஃப் உங்களோடதுதான். அப்பாங்கற எடத்துல என்னை வச்சு என் வார்த்தைக்கு மதுமரியாதை கொடுக்கணும்னு நான் எதிர்பார்க்கலை. உங்களுக்கு யோசிக்கற தகுதி இருக்கு. நல்லா யோசிச்சிட்டு ஒரு முடிவுக்கு வாங்க.''

சிவராமனுக்கு மழை பெய்து மண் குளிர்ந்த மாதிரி இருந்தது.

''சரி சார்'' என்றான்.

''ஹலோ மிஸ்டர் சிவராம்!''

பின்னால் இருந்து குரல் கேட்டது.

''மீட் மீரா'' என்றாள் மதுமதி.

மீரா கையை நீட்டி அவன் கையைப் பற்றிக் குலுக்கினாள். பதினேழு வயதுத் துள்ளல். பின்னலின் ஊஞ்சல். மேலே ஆண் சட்டை. கீழே பாவாடை.

''யூ ஆர் ஸ்மார்ட்'' என்றாள்.

சிவராமனுக்கு இறுக்கம் தளர்ந்தது. முகத்தில் சிரிப்பு தோற்றியது.

''தாங்க்ஸ்'' என்றான்.

சிவராமன் மெல்ல எழுந்து கொண்டான்.

''கௌம்பட்டுமா மது?''

''அதுக்குள்ளயா சிவா?'' என்று மது மெலிதான ஏக்கத்துடன் கேட்டாள்.

''இன்னொரு நாள் சாவகாசமா வரேனே'' என்றான். எல்லோரிடமும் பொதுவாய் ஒருமுறை சொல்லி விட்டு அந்த வீட்டிலிருந்து வெளிப்பட்டான். மதுமதியும் வெளியே வந்து செருப்பை அணிந்து கொண்டாள்.

''நீ?''

''கார் வரைக்கும்...'' என்றாள்.

வெளியில் நன்றாக இருட்டி இருந்தது. காரை நிறுத்திய இடத்திற்கு வந்தார்கள்.

''கோவமா சிவா?''

''உம்மேலயா?''

''ம்...''

''எதுக்கு?''

''அப்பா அப்படிப் பேசினதுக்கு....''

''சேச்சே. கொஞ்சம் பயந்தேன். ஆனா உன்னை யாராலயும் எங்கிட்டேர்ந்து பிரிக்க முடியாது மது... நீயா வேண்டாம்னு சொன்னாலே தவிர...'' என்றான் சிவராமன்.

''சிவா'' என்று பதற்றமாய்ச் சொன்னாள் மதுமதி. ''நீங்கதான் உலகம்னு நெனைச்சிட்டிருக்கேன் சிவா. உங்களைத் தவிர வேற யாருக்குமே அங்க எடமில்ல.''

''ஹாய் மது...'' என்று அட்டகாசமான ஒரு ஆண் குரல் கேட்டது. கரகரப்பான குரல்.

மதுமதி திடுக்கிட்டுத் திரும்பினாள். சிவராமன் புருவ நெறிப்புகளுடன் பார்த்தான்.

ஆறடிக்குச் சற்றுக் குறைவான உயரம். அகலக் கட்ட ஜுங்கி. அவசரமாய்ப் போட்ட சட்டை. கலைந்த தலை. அவன் நின்றிருந்தான்.

சிவராமன் புரியாமல் பார்த்தான்.

(தொடரும்)

# வதங்கிய குழந்தைகளுக்கும் வாழ்க்கை காத்திருக்கிறது...

அர்ச்சனா பிறந்த போது மிக அழகாக இருந்தாள். ஆரோக்கியமான குழந்தை — கருகருவென்று தலைமுடி, பளிங்கு முகத்தைச் சுற்றி அழகான கம்பளிக் குல்லா போர்த்தது போல் இருந்தது. உற்றாரும் உறவினரும் ஜெயந்தியின் முதல் குழந்தையைப் பூரிப்புடன் வரவேற்றனர். ஜெயந்தியும் உற்சாகத்துடன் இருந்தார் — குழந்தை பிறந்து பத்து நாட்கள் ஆகும் வரை...

பிறந்து பத்து நாட்கள் ஆன பிறகும் அர்ச்சனாவின் விழிகள் கண்ணின் மையத்தில் நிலைபெற்றுப் பொருந்தாமல் வலமும் இடமுமாகப் பிரிந்தபடி இருந்தன. ஜெயந்தியின் மனத்தில் லேசான கவலையை இது ஏற்படுத்தியது. டாக்டரிடம் இதைப் பற்றிப் பேசிய போது, ஒரு மாதம் வரை பொறுத்திருந்து பார்க்கச் சொன்னார். முதல் மாதம் குழந்தையைப் பொதுவான பரிசோதனைக்குக் குழந்தை மருத்துவ நிபுணரிடம் அழைத்துச் சென்ற போது மீண்டும் இப்பிரச்னையை எழுப்பினார் ஜெயந்தி. அறுவைச் சிகிச்சை தேவைப்படலாம் என்று டாக்டர் சொன்னதும் ஜெயந்தி ஆடித்தான் போனார். ஆனால் டாக்டருக்கு என்ன தோன்றியதோ, 'எதற்கும் ஒரு நரம்பியல் நிபுணரிடம் குழந்தையைக் காட்டுங்களேன்' என்று மற்றொரு கருத்தையும் தெரிவித்தார்.

நரம்பியல் நிபுணரோ, குழந்தையின் கண் பார்வையைச் சோதிக்க வேண்டும் என்று தெரிவித்தார். சென்னை ஜி.எச்.—இல் அப்பரிசோதனையைச் செய்ததில் குழந்தையின் **Optic nerves** (கண் பார்வைக்கு உதவும் நரம்புகள்) சிதைந்திருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டது. மீண்டும் நரம்பியல் நிபுணர், குழந்தைகள் மருத்துவ நிபுணர் என்று ஒவ்வொருவராகக் கலந்தாலோசித்தார் ஜெயந்தி. எல்லோரும் "உன் குழந்தையின் முழுமையான வளர்ச்சி சராசரி குழந்தையினுடையதைக் காட்டிலும் ஒன்று அல்லது ஒன்றரை ஆண்டு தாமதமாகத்தான் ஏற்படும்" என்று கூறினார்களேயொழிய, அர்ச்சனாவைப் பாதித்துள்ளது எது என்றோ, பிரச்னைக்குத் தீர்வு என்னவென்றோ கூறவில்லை.

ஒரு வருடம் கழிந்தது; அப்போதும் அர்ச்சனாவின் தலை ஒரு மாதக் குழந்தையின் தலையைப் போல் தொய்ந்தே இருந்தது. இரண்டு வருடங்கள் ஆன பிறகும் குழந்தை வாய் திறந்து ஒரு வார்த்தை பேசவில்லை. மூன்று வயது ஆயிற்று — அப்போதுதான் அர்ச்சனா தனிர்நடை நடக்க முயற்சி செய்தாள். கழிப்பறைக்குப் போக வேண்டும் என்று சொல்லத் தெரியாமல் அவ்விஷயத்தில் கட்டுப்பாடு இன்றி இருந்தாள். இரவு அரை மணி நேரத்துக்கு மேல் அயர்ந்து தூங்காமல் புரண்டு கொண்டிருந்தாள்.

இந்நிலையில்தான் ஜெயந்தி டீ.வி.யில் ஒரு நிகழ்ச்சியைப் பார்த்தார். குழந்தைகளைப் பாதிக்கும் Cerebral Palsy என்ற ஊனத்தைப் பற்றிய நிகழ்ச்சி அது. 'நம் அர்ச்சனாவும் இத்தகைய மூளைச் சிதைவால் பாதிக்கப்பட்டிருக்கலாம்' என்று அவருக்குத் தோன்றியதும் மற்றொரு குழந்தை மருத்துவ நிபுணரைச் சந்தித்துத் தமது சந்தேகத்தை வெளியிட்டார். அவர் அறிவுரையின் பேரில் அர்ச்சனாவை ஒரு சிறப்புப் பள்ளியில் சேர்க்க உடனடியாக நடவடிக்கை எடுத்தார் ஜெயந்தி.

செரிப்ரல் பால்ஸி எப்படி ஏற்படுகிறது? தாயின் கருவில் இருக்கும் கடை ஆறு மாதங்கள் முதல் நான்கு வயது வரைதான் மனித மூளை மிக வேகமாக வளர்ச்சி அடைகிறது. இந்தக் கால கட்டத்தில் பிராண வாயு மற்றும் குளுகோஸ் சத்து மூளைக்குத் தடையின்றிச் சென்று கொண்டேயிருக்க வேண்டும். அப்படிச் செல்வதில் ஏதேனும் தடை ஏற்பட்டால் மூளையின் சில செல்கள் சிதைந்து விடுகின்றன. இவ்வாறு சிதைந்து போகும் செல்களின் அளவையும் குணத்தையும்



* "எங்களாலும் எழுத முடியும்!"

பொறுத்து உடலில் ஒன்றுக்கு மேற்பட்ட ஊனங்கள் ஏற்படுகின்றன. நரம்பு மண்டலம் பாதிக்கப்படுவதால், குழந்தை இயல்பாகச் செய்ய வேண்டிய எச்சில் விழுங்குவது, பேசுவது, நடப்பது, கை கால்களைப் பயன்படுத்துவது போன்ற செயல்கள் தடைப்படுகின்றன. அதனால் செரிப்ரல் பால்ஸி — யால் பாதிக்கப்பட்ட குழந்தை தலை தொங்கி, கைகால்கள் துவண்டு, கடைவாயில் உமிழ்நீர் ஒழுக, பரிதாபமாய்த் தோற்றம்



* தொழிற்கல்வி

அளிக்கிறது. உடற்கூறு பாதிப்பைப் போலவே மூளை வளர்ச்சி தடைப்படவும் வாய்ப்பு உண்டு. சில சமயம் இரண்டு பாதிப்புகளும் சேர்ந்து நிகழக் கூடும்; சில சமயம் உடற்கூறு பாதிப்பு மட்டுமே நிகழும்.

பிரசவத்தின் போது குழந்தையின் கழுத்தில் கொடி சுற்றிக் கொள்வது, மற்றும் சில குழந்தைப் பேறு மருத்துவர்களின் அறியாமை, அல்லது அஜாக்கிரதை காரணமாக ஏற்படும் பேறுகாலக் கோளாறுகள், கர்ப்பமாய் இருக்கும் போது தாய் மிகக் கடுமையான மருந்துகளை உட்கொள்ளுதல் போன்ற காரணங்களால் வளர்கின்ற மூளைக்குப் பிராண வாயு மற்றும் க்ளூகோஸ் செல்வது தடைப்படக் கூடும். குழந்தை பிறந்த பிறகு அதற்குக் கடுமையான ஜுரம் மற்றும் வலிப்பு ஏற்பட்டாலும் இது நிகழக் கூடும். ஆனால் என்ன காரணத்தால் நிகழ்ந்தாலும் சரி மூளையின் சிதைந்து போன செல்களைச் சீர் செய்யவே முடியாது என்பதால் செரிப்ரல் பால்ஸி என்ற நிலையை அறுவைச் சிகிச்சை மூலமோ மருந்துகள் மூலமோ குணப்படுத்தவே முடியாது. பாதிக்கப்பட்ட குழந்தைகள் ஆயுள் முழுவதும் தங்கள் ஊனங்களுடன் வாழ வேண்டியது தான்!

ஆனாலும், இன்று இத்துறையில் ஆராய்ச்சிகள் செய்யப்பட்டு, 'மூளைச் சிதைவு அடைந்த குழந்தைகளும் தன்நிறைவை எய்த முடியும்; மற்ற குழந்தைகளைப் போல் திரிந்து, பறந்து விளையாடா விட்டாலும், சாதனையாளர்களாய் வளரா விட்டாலும், கௌரவமான வாழ்க்கையை வாழ முடியும்' என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது.

மூளைச் சிதைவால் பாதிக்கப்பட்ட மாலினி என்ற பெண் இன்று பம்பாயில் பி. ஏ. பரீட்சையில் தேறி, பத்திரிகையாளர் ஆகவேண்டும் என்ற லட்சியத்தை நோக்கி முனைப்புடன் புறப்பட்டுள்ளார். இத்தனைக்கும் இவரால் சக்கர நாற்காலியின்றிச் சில அடிகளுக்கு மேல் நகர முடியாது. பேச முடியாது, எழுத முடியாது! தேர்வு எழுத இவர் பயன்படுத்தியது ஓர் எலக்ட்ரானிக் தொடர்பு சாதனத்தை. மாலினிக்குத் தன்னம்பிக்கை யூட்டித் துணை நின்ற அவர் தாயார் மித்து

அலூரார் துவங்கிய ஸ்தாபனம்தான் Spastic Society of India. (மூளைச் சிதைவால் பாதிக்கப்பட்ட குழந்தைகளைத்தான் Spastics என்று அழைக்கிறார்கள்). இந்த நிறுவனம், பாதிக்கப்பட்ட குழந்தைகளுக்குச் சிறப்புப் பயிற்சிகளையும் பாடங்களையும் நடத்தி, அவர்கள் சுயமரியாதையோடும், பிறர் உதவி இன்றியும் வாழ வழி காட்டுகிறது. பம்பாய், தில்லி, கல்கத்தா, பெங்களூர், சென்னை ஆகிய இடங்களில் கிளைகள் உள்ளன இந்நிறுவனத்துக்கு.

சென்னைக் கிளை தியாகராய நகரில், ராஜாம்பாள் தெருவில் ஒரு சிறிய வீட்டில் இயங்கி வருகிறது. அங்கு சென்று பார்த்த போது, மிக மோசமாகப் பாதிக்கப்பட்ட குழந்தைகளின் நிலையைக் கண்டு சோகமும், முன்னேறி வருகின்ற சில குழந்தைகளின் நிலையைக் கண்டு மகிழ்ச்சி கலந்த ஆச்சரியமும், அங்கு பணியாற்றும் ஒவ்வொரு நபரிடமும் காணப்பட்ட ஆழ்ந்த ஈடுபாடு மற்றும் மனோதிடத்தைக் கண்டு மெய்சிலிர்ப்பும் ஏற்பட்டன.

எல்லையில்லாத பொறுமையும் ஒவ்வொரு குழந்தையையும் தன் குழந்தையாகப் பாவிக்கும் மனோநிலையும் தேவை என்பதாலோ என்னவோ இங்கு பணியாற்றும் எல்லோருமே பெண்களாக இருக்கிறார்கள். சென்னை கிளையின் தலைவி பூனம், தமது குழந்தை ஸ்பாஸ்டிக் குழந்தை என்பதால் இதனை ஆரம்பிக்கத் தூண்டப்பட்டார். இதில் அவருக்கு உதவியவர்கள் ஆஷா, ஆபா என்ற இரு பெண்கள்.

இவர்களிடம் அழைத்துவரும் ஒவ்வொரு குழந்தையையும் தனித்தனியே, பூரணமாகச் சோதித்து, அவர்களது பெற்றோர்களுடன் பேசி, ஒவ்வொரு குழந்தைக்கும் பிரத்தியேகமான பயிற்சித் திட்டத்தை வகுக்கிறார்கள். பேசுவதற்கு, துவண்டுள்ள கை, கால், தலை போன்ற உறுப்புக்களை நிமிர்த்தி இயங்கச் செய்வதற்கு, சாப்பிடுவது, கழிப்பறைக்குப் போவது, தன் இதர தேவைகளைக் கவனித்துக் கொள்வது போன்றவற்றுக்குத் தனித்தனியே பயிற்சி அளிக்கப்படுகிறது. ஓரளவு தேறிய குழந்தைகளுக்கு எழுதவும் படிக்கவும் கற்றுத் தரப்படுகிறது. இன்னும் வளர்ந்த பிள்ளைகளுக்கு உபயோகமான தொழில் கற்க வசதி செய்து தரப்படுகிறது. மிகச் சிறிய கைக் குழந்தைகளுக்குத் தனியே பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன.

இவை தவிர பெற்றோர்களுக்கும் தங்கள் குழந்தைகளுக்கு எப்படிப் பயிற்றுவிப்பது, அவர்களை எவ்வாறு சமூகத்தின் ஓர் அங்கமாக ஏற்கச் செய்வது, அவர்களைப் பற்றி மனம் புண்படும்படியாகப் பிறர் பேசினாலோ, கேள்விகள் கேட்டாலோ எவ்வாறு பதில் சொல்வது போன்றவற்றில் அறிவுரைகள் வழங்கப்படுகின்றன. பெரும்பாலான பெற்றோருக்குத் தங்களுக்கு இப்படி ஒரு குழந்தை உள்ளது என்பதை ஏற்றுக் கொள்வதே கடினமாக இருக்கும்.



* கை, கால்களுக்குப் பயிற்சி.

இத்தகையோர் இங்கு வந்து பிற குழந்தைகளையும் பிற பெற்றோர்களையும் பார்க்கும் போது தங்கள் பிரச்னையைச் சந்திக்க பலம் பெறுகின்றனர்.

மனோதத்துவ இயலில் பட்டம் பெற்று, ஸ்பாஸ்டிக் குழந்தைகளுக்குப் பயிற்றுவிப்பதில் சிறப்புப் பயிற்சி பெற்று, இங்கு ஆசிரியையாகப் பணியாற்றுகிறார் உஷா. "ஒன்றுமே செய்ய இயலாது என்று எண்ணிப் பெற்றோர்கள் இங்கு அழைத்து வரும் சில குழந்தைகள் இன்று நாலாம் வகுப்புக்கான பாடங்களைப் படிக்கிறார்கள். இவர்கள் ஒவ்வொருவருக்கும் விசேஷ கவனம் செலுத்திக் கற்றுத் தர வேண்டும் என்பதால் இவர்களால் சராசரி பள்ளிகளுக்குப் போக முடியாது. உதாரணமாகப் 'பந்து' என்ற சொல்லைக் காதால் கேட்டு, அப் பந்தைக் கண்ணால் காணும் ஒரு குழந்தைக்குத் தான் பார்த்த பொருளோடு தான் கேட்ட சொல்லைத் தொடர்புபடுத்த இயலாது. திரும்பத் திரும்பச் சொல்லி, காண்பித்துச் சொன்ன பிறகே இறுதியில் அக் குழந்தை அதைப் புரிந்து கொள்ளும். ஆனால் அந்த ஒரு

* பேச்சுப் பயிற்சியளிக்கிறார் ஜெயந்தி.



கணத்து வெற்றியில் நாம் உழைத்த பல நாள் உழைப்பின் முழுப் பலனும் கிடைத்து விடும்'' என்று மிகவும் உணர்ந்து கூறினார் உஷா.

ஆஷா, இந் நிறுவனத்தின் வெளித் தொடர்பு பணிகளைக் கவனித்துக் கொள்பவர். இவர் அன்னை தெரஸா நடத்தும் சிசு பவனில் உள்ள சுமார் முப்பது ஸ்பாஸ்டிக் குழந்தைகளின் பரிதாப நிலையை மிகவும் முயன்று மாற்றி வருகிறார். அங்குள்ள பிற ஊனமுற்ற மற்றும் ஆரோக்கியமான அபலைப் பெண்களுக்கு ஸ்பாஸ்டிக் குழந்தைகளுக்குப் பயிற்றுவிப்பது எப்படி என்று கற்றுக் கொடுத்தும் வருகிறார். ''முதலில் பார்க்கும் போது அதிர்ச்சியும் வேதனையும் மேலிட்டாலும் இவர்களை மனிதர்களாக்க வேண்டும் என்று ஒரு வேகம் பிறக்கத்தான் செய்கிறது. கூடவே, இவர்கள் நிலையோடு ஒப்பிடும் போது நமது உப்புப் பெறாத சொந்தப் பிரச்னைகள் தூசாகப் பறந்து விடுகின்றன'' என்றார் ஆஷா.

''ஸ்பாஸ்டிக் குழந்தை மூளையில் சிதைவு ஏற்பட்டுள்ளதால் பாதிக்கப்பட்டிருக்கும் ஒரு சாதாரண குழந்தை. தொற்று நோயோ, மனோவியாதியோ, அதன் உடன் விளைவுகளான முரட்டுக் குணங்களோ உள்ள குழந்தை அல்ல. பலர் இதைப் புரிந்து கொள்வதில்லை. ஒட்டுமொத்தமாகப் பைத்தியம் என்று முத்திரை குத்திவிடுகிறார்கள். அல்லது வியாதி என்று பயந்து ஒதுங்குகிறார்கள். இது அவசியமில்லை என்பதோடு குழந்தையையும் அதன் பெற்றோரையும் புண்படுத்துகிற விஷயம். ஸ்பாஸ்டிக் குழந்தைகளைப் பற்றிய அறிவும் பிரக்ஞையும் பொது மக்களிடையே பரவினால் அதுவே அக் குழந்தைகளுக்குப் பேருதவியாய் இருக்கும். இதற்கு நாங்களும் எங்களால் இயன்றதைச் செய்து வருகிறோம். இத் துறையில் பட்ட மேல்படிப்பு படிப்பவர்கள் சிலர் எங்களிடம் பயிற்சிக்கு வருகிறார்கள். அரசாங்க மருத்துவமனை ஊழியர்கள் சிலர் எங்களிடம் பயிற்சி பெற்றிருக்கிறார்கள். சுமார் எட்டு புதிய குழந்தைகள் ஒவ்வொரு வாரமும் எங்களைத் தேடி வருகிறார்கள். பொதுவாக ஸ்பாஸ்டிக் குழந்தைகள் பற்றிய அறிவு பெருகி வருகிறது என்பதற்கு இது ஒரு நல்ல அடையாளம்..'' என்கிறார் இந் நிறுவனத்தின் துணை முதல்வர் ஆபா.

''சாதாரண, சராசரி குழந்தைகளுடன் கலந்து பழகுவது இந்தக் குழந்தைகளுக்கு மிக முக்கியம். இதனால் இரு தரப்பினருக்கும் உபயோகமாக இருக்கும்'' என்கிறார் மாலினி என்ற பெண்மணி. இதற்காகவே சில சராசரி குழந்தைகளை அழைத்து வந்து இவர்களுடன் கலந்து விளையாட விட்டோம். நாங்கள் எதிர்பார்த்ததைக் காட்டிலும் அம் முயற்சி வெற்றிகரமாய் அமைந்தது'' என்கிறார்.

ஜெயந்தி — இக் கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிட்ட குழந்தை அர்ச்சனாவின் தாய் — இன்று இந் நிலையத்தில் Speech Therapist ஆகப் பணியாற்றி வருகிறார். ''என் குழந்தை எல்லா குழந்தைகளையும் போல் இல்லை. அவளுக்கு விசேஷ கவனம் தேவை என்பதை நான் உணர்ந்தாலும், அந்த உணர்வுடன் தலைநிமிர்ந்து வாழ, சமூகத்தின் கேள்விக்கணைகளையும் மறுதலிப்பையும் சந்திக்க, அவற்றை வெற்றி கொள்ள எனக்கு உதவியது ஸ்பாஸ்டிக் சொஸைடி ஆஃப் இந்தியாதான்'' என்கிறார் இவர்.

ஸ்பாஸ்டிக் சொஸைடியில் பணிபுரியும் அனைவரையும் போல் லட்சிய நோக்குடன் நம்மால் இத்தகைய குழந்தைகளுக்கு உதவ முடியாமல் போகலாம். ஆனால் அடுத்த முறை அத்தகைய ஒரு குழந்தையைச் சந்திக்கும் போது முகத்தைச் சுளித்துக் கொண்டு திரும்புவதற்குப் பதிலாக, 'ஐயோ பாவம்' என்று அனுதாபத்துடன் வருத்தம் தெரிவிப்பதற்குப் பதிலாக, கேள்விக் கணைகளால் அதன் பெற்றோரைத் துளைப்பதற்குப் பதிலாக, தோழமையுடன் சிரித்து, 'ஹலோ' என்று சொன்னால் போதும். அந்த அங்கீகாரத்தால் அக் குழந்தை நிரம்ப பலமும் பெருமையும் அடையும்.

— சிஷ்யா

வண்ணப்படம் மற்றும் புகைப்படங்கள்:

கே. வி. ஆனந்த்

---



''உன்னோட காதல்தான் எனக்குச் சொத்துன்னு என்னை முதன் முதலாச் சந்தித்த அன்று சொன்ன நீங்க, இப்ப ஏன் என்னைத் திருமணம் செய்துக்க மறுக்கிறீங்க?''

''இடைப்பட்ட காலத்துல உங்கப்பா, நஷ்டம் வந்து சொத்துப் பூராவையும் வித்துட்டாரே!''

— மணியன் தர்மலிங்கம்.

# இதைப்போல் எங்கும் இல்லை




| | | |
|---|---|---|
| பீங்கான்/ பிளாஸ்டிக் சாமான்கள் | | படுக்கை விரிப்புகள்/ டவல்கள் |
| அலங்கார விளக்குகள் | | அலங்கார சாதனங்கள் |
| தோல் பொருட்கள்/ காலணிகள் | | பொம்மைகள்/ :.பேன்ஸி பொருட்கள் |
| ஆடைகள்/ஜவுளிகள் | | விளையாட்டு பொருட்கள் |
| போட்டோ சாதனங்கள் | | கைவினைப் பொருட்கள் |
| சமையல் சாதனங்கள் | | பணியாரங்கள்/கேக்குகள் |
| ஐஸ்கிரீம்கள் | மாமிச வகைகள் | செடி வகைகள் |
| வாட்டர் ஹீட்டர் | டெலிவிஷன்கள் | பர்னீச்சர் |
| குளுகுளு சாதனங்கள் | ஸ்டேஷனரி | புத்தகங்கள் |

வெள்ளி/தங்க நகைகள்

குளுகுளு பெட்டிகள்



இலவச கார் பார்க்கிங் வசதி உண்டு.

FAME/S/1425 TAM A




## அத்தியாயம் 31
## பசும் பட்டாடை

மறுநாள் மாலையில் வந்தியத்தேவன் முதன் மந்திரி அநிருத்தரின் ஓலையுடன் அரிசிலாற்றங் கரையோடு குடந்தை நகரை நோக்கிப் போய்க் கொண்டிருந்தான். குதிரையை விரட்டாமல் மெள்ளச் செலுத்திக் கொண்டு இருபுறமும் தோன்றிய இனிய காட்சிகளைப் பார்த்துக் கொண்டு போனான்.

ஐப்பசி மாதத்தின் ஆரம்பத்தில் சோழ வளநாடு பூரணப் பொலிவுடன் விளங்கிற்று. இயற்கை அரசி பச்சைப் பட்டாடை உடுத்தி நவ யௌவன சௌந்தரியத்துடன் திகழ்ந்தாள். அந்தப் பச்சைப் பட்டாடையில்தான் எத்தனை விதவிதமான பசுமைச் சாயல்கள்! கழனிகளில் கதிர் விடுவதற்குத் தயாராயிருந்த நெற்பயிர்கள் ஒரு சாயல்; நடவு நட்டுச் சில காலமாகியிருந்த இளம் பயிர்கள் இன்னொரு சாயல்; அப்போதுதான் நடவாகியிருந்த பசும் பொன்னிறப் பயிர்கள் வேறொரு சாயல்! ஆலமரத்தில் தழைத்திருந்த இலைகள் ஒரு பசுமை; அரச மரத்தில் குலுங்கிய இலைகள் இன்னொரு விதப் பசுமை; தடாகங்களில் கொழுகொழுவென்று படர்ந்திருந்த தாமரை இலைகளின் மோகனப் பசுமை; வாழை இலைகளின் கண் கவரும் பசுமை; தென்னங் குருத்துக்களின் தந்த வர்ணப் பசுமை; பூமியில் இளம் புல்லின் பசுமை; ஓடைகளில் தெளிந்த நீரின் பசுமை; நீரில் அங்குமிங்கும் தத்திப் பாய்ந்த தவளைகளின் பசுமை.

இவ்வளவு விதவிதமான சாயல்கள் வாய்ந்த பச்சைப் பட்டாடையின் அழகைத் தூக்கிக் காட்டுவதற்கென்று நட்சத்திரப் பொட்டுக்கள் பதித்தது போல் குவளைகளும் குமுதங்களும் செந்தாமரை மலர்களும் செங்கழுநீர்ப் பூக்களும் ஆங்காங்கு ஜொலித்துக் கொண்டிருந்தன.

இந்த அழகையெல்லாம் வந்தியத்தேவன் இரு கண்களாலும் பருகிக் கொண்டு பிரயாணம் செய்தான். ஆடி மாதத்தில் அந்த வழியாக அவன் சென்ற போது பார்த்த காட்சிகளுக்கும் இப்போது காணும் காட்சிகளுக்கும் உள்ள வேற்றுமையை அவன் உணர்ந்திருந்தான். ஆடி மாதத்தில் ஆற்றில் புது வெள்ளம் நுங்கும்

அமரர் கல்கி

நுரையுமாகப் பொங்கிப் பெருகிக் கொண்டிருந்தது. இப்போதோ பிரவாகத்தின் வேகமும் கோபமும் தணிந்து, செந்நிறம் மாறி, பளிங்கு போல் தெளிந்து, உல்லாஸமாகப் பவனி சென்றது. புது வெள்ளத்தின் 'ஹோ' என்ற இரைச்சலும், மேலக் காற்று மரக்கிளைகளைத் தாக்கிய போது உண்டான பேரோசையும், ஆயிரமாயிரம் புள்ளினங்களின் கோலாகலத் தொனிகளும் அப்போது ஒரு மாபெருந் திருவிழாவின் ஆரவாரத்தைப்போல்கேட்டன. இன்றைக்கோ குளிர்ந்த வாடைக் காற்றில் இலைகள் அசைந்த மர்மர சத்தமும், மடைகளில் தண்ணீர் பாய்ந்த சலசலப்பு ஓசையும், மழையை எதிர்பார்த்த மண்டூகங்களின் சுருதி பேதக் குரல்களும், பலவகைச் சில்வண்டுகளின் ஸ்வர பேத ரீங்காரங்களும் சேர்ந்து இயற்கை மாதரசியின் சோக சங்கீத கோஷ்டி கானத்தைப் போல் ஒலித்துக் கொண்டிருந்தன.



வந்தியத்தேவனுடைய உள்ளத்திலும் அப்போது ஏதோ ஒருவகையான இனந்தெரியாத சோகம் குடி கொண்டிருந்தது. இதன் காரணம் என்னவென்று யோசித்து யோசித்துப் பார்த்தும் அவனுக்குப் புலப்பட வில்லை. உண்மையில் அவன் அபரிமிதமான உற்சாகம் கொள்வதற்கு வேண்டிய காரணங்கள் இருந்தன. இந்த வழியாக இரண்டு மாதங்களுக்கு முன்னால் போனபோது என்னென்ன மனோராஜ்யங்கள் செய்தானோ, அவ்வளவும் நிறைவேறி விட்டன. அவன் கனவிலும் நடக்கும் என்று கருதாத காரியங்களும் நடந்தேறி விட்டன. சுந்தர சோழ சக்கரவர்த்தியைத் தரிசித்தாகி விட்டது. தஞ்சாவூர், பழையாறை, மாதோட்டம், அநுராதபுரம் முதலிய மாபெரும் நகரங்களைப் பார்த்தாகி விட்டது. சோழநாட்டின் கண்ணுக்குக் கண்ணாக விளங்கிய பொன்னியின் செல்வனுடைய சிநேகம் கிடைத்து விட்டது; அந்த வீர இளவரசனுக்கு உதவி புரியும் பேறும் கிடைத்து விட்டது. தமிழகத்தின் அழகுத் தெய்வமும், சோழர் குல விளக்குமான அரசிளங்குமரி குந்தவையை ஒரு முறை பார்ப்பதற்கே எத்தனையோ தவம் செய்திருக்க வேண்டும். அப்படியிருக்க அவளுடைய தூய இதயத்தின் நேயத்தைப் பெறுவதென்பது எத்தகைய பெறற்கரும் பாக்கியம்? அதை எண்ணியபோது அவன் உள்ளம் பெருமிதத்தினால் பொங்கியது. ஆனால் அந்தப் பெருமித குதூகலத்துடனே ஏதோ ஒரு வேதனையும் தொடர்ந்து வந்தது. அவ்வளவு பெரிய பாக்கியத்துக்கு நான் உண்மையில் உரியவன் தானா? அது நிலைத்து நிற்குமா? கைக்கு எட்டியது வாய்க்கெட்டுவதற்குள் எவ்வளவோ தடங்கல்கள் ஏற்படக்கூடும் அல்லவா?

ஆகா! தடங்கல்களுக்கு என்ன குறைவு? உலகமே தடங்கல் மயந்தான்! ரவிதாஸனைப் போன்ற மாய மந்திரவாதிகளும், நந்தினியைப் போன்ற மாய மோகினிகளும், பழுவேட்டரையர்களைப் போன்ற சதிகாரர்களும், கந்தமாறனையும் பார்த்திபேந்திரனையும் போன்ற சிநேகத் துரோகிகளும், பூங்குழலியையும் வானதியையும் போன்ற பித்துக் கொள்ளிப் பெண்களும், வீர வைஷ்ணவ ஒற்றர்களும்,



காளாமுக சைவர்களும், கொள்ளி வாய்ப் பேய்களும், ஆழந் தெரியாத புதைசேற்றுக் குழிகளும் நிறைந்த உலகமல்லவா இது? கடவுளே! மேற்கூறிய அபாயம் ஒவ்வொன்றிலிருந்தும் எப்படியோ இதுவரை தப்பித்து வந்து விட்டேன்! அவை எல்லாவற்றையும் விடப் பெரும் அபாயகரமான காரியத்தில் இப்போது முதன் மந்திரி அநிருத்தர் என்னை ஏவியிருக்கிறார்! ஒரு பக்கத்தில், எளிதில் மூர்க்காவேசம் கொள்ளக் கூடிய ஆதித்த கரிகாலர்; மற்றொரு பக்கத்தில் பெரிய பழுவேட்டரையரைப் பொம்மையைப் போல் ஆட்டி வைக்கும் மாய சக்திவாய்ந்த மோகினி, — இவர்களுடைய நோக்கத்துக்குக் குறுக்கே நின்று நான் தடை செய்து வெற்றி பெற வேண்டுமாம்! இது நடக்கக் கூடிய காரியமா? அந்தப் பிரம்மராயருடைய மனத்தில் என்னதான் உண்மையில் எண்ணியிருக்கிறாரோ தெரியாது! அரசிளங் குமரியிடமிருந்து என்னைப் பிரித்து விடுவதே அவருடைய நோக்கமாயிருக்கலாம் அல்லவா? ஆழ்வார்க்கடியான் வழியில் வந்து சேர்ந்து கொள்வான் என்று இருவரும் சொன்னார்கள்! அவனையும்இதுவரையில்காணோம்! அந்த வீர வைஷ்ணவன் எப்படிப்பட்டவனாயிருந்தாலும் இது வரையில் எனக்கு ஒரு கெடுதலும் செய்ததில்லை: பல முறை உதவிதான் புரிந்திருக்கிறான். அவனுடன் சேர்ந்து பிரயாணம் செய்தால், ஏதாவது உற்சாகமாகப் பேசிக் கொண்டிருப்பான். பிரயாணத்தில் அலுப்புத் தட்டாமல் இருக்கும். இனி எங்கே வந்து அவன் நம்முடன் சேர்ந்து கொள்ள முடியும்? அவனுக்காக எத்தனை நேரந்தான் இந்தக் குதிரையை இழுத்துப் பிடித்து மெள்ளச் செலுத்திக் கொண்டுபோவது?.......

ஆகா! அதோ கும்பலாயிருக்கும் மரங்கள்! நதி வெள்ளத்தில் முதலைகளைப் போல் கிடக்கும் அந்த வேர்கள்! இங்கேதான் பொம்மை முதலை மீது வேல் எறிந்த படலம் நடைபெற்றது! வாரிணியும் தாரகையும் செந்திருவும் மந்தாகினியும் நம்முடைய வீரச் செயலைப் பார்த்துக் கலகலவென்று சிரித்தது இவ்விடத்திலேதான்! அரசிளங்குமரி நமக்குப் பரிந்து அந்தப் பெண்களை அதட்டியதும் இதே இடத்தில்தான்! சற்று இங்கே நின்று பார்க்கலாம்!........

வந்தியத்தேவன் குதிரை மீதிருந்து இறங்கி நதிக் கரையின் ஓரமாகச் சென்று நின்றான். மரத்தின் வேர்களைச் சுற்றிச் சுழற்றிச் சுழலிட்டுக் கொண்டு ஓடிய தெளிந்த நீர்ப் பிரவாகத்தைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்...... ஆகா! அந்தச் சுழலில் ஒரு முகம் தெரிகிறது! அது யாருடைய முகம்? சொல்லவேண்டுமா? அரசிளங்குமரி குந்தவைப் பிராட்டியின் இன்பப் பொன் முகந்தான்!........

''கண்டேன் கண்டேன் கண்டேன்
கண்ணுக்கினியன கண்டேன்!''

என்று பாடிய குரலைக் கேட்டு வந்தியத்தேவன் திடுக்கிட்டு அண்ணாந்து பார்த்தான். உன்னதமான மரத்தின் உச்சாணிக் கிளை ஒன்றில் ஆழ்வார்க்கடியான் அமர்ந்திருப்பது தெரிந்தது.

''ஓகோ! வீர வைஷ்ணவரே! நான் உம்முடைய திருக் கண்களுக்கு அவ்வளவு இனியவனாக இருக்கிறேனா? நானும் உம்மைச் சிறிது நன்றாகப் பார்க்கிறேன். கீழே இறங்கி வருக!'' என்று சொன்னான் வந்தியத்தேவன்.

வீர வைஷ்ணவன் மரத்திலிருந்து இறங்கிய வண்ணம், ''நான் உன்னைச் சொல்லவில்லை, அப்பனே! உடையில் வாளும் கையில் வேலும் ஏந்திய நீ என் கண்ணுக்குப் பயங்கரமாக வல்லவோ புலப்படுகிறாய்?'' என்றான்.

''பிறகு யாரைப் பற்றிச் சொன்னீர் வைஷ்ணவரே!''

''முழு முதற் கடவுளாகிய திருமால் வாமனாவதாரம் எடுத்து வந்து வானத்தை அளப்பதற்காக ஒரு பாதத்தைத் தூக்கிய போது உங்கள் சிவபெருமானுடைய கண்களுக்கு....''

''வைஷ்ணவரே! நிறுத்தும்! இம்மாதிரியெல்லாம் சிவனைத் தாழ்த்திக் கூறுவதை நிறுத்திவிடும். இல்லாவிடில் பெரிய அபாயத்துக்கு உள்ளாவீர்!''

''என்ன அபாயம், அப்பனே! முதலையைக் கொன்று யானையைக் காத்த பெருமானின் சக்கரம் இருக்கும்போது என்னை யார் என்ன செய்ய முடியும்?''

''நான் சொல்வதைச் சொல்லி விட்டேன். அப்புறம் உமது இஷ்டம்.''

''எனக்கு என்ன அபாயம் வருகிறது என்று சொல், தம்பி!''

''பழையாறையில் ஜனங்கள் கொந்தளித்து அரண்மனை வாசலுக்கு வந்தார்கள் அல்லவா? அப்போது சில காளாமுகர்கள் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டேன்.''

''என்ன பேசிக் கொண்டார்கள்?''

''சோழ நாட்டில் பெருகி வரும் வீர வைஷ்ணவர்களை மகா காளிக்குப் பலி கொடுத்து, அவர்களுடைய மண்டை ஓடுகளைக் குவித்து அடுக்கி, அவற்றின் பேரில் நின்று ஆனந்தத் தாண்டவம் ஆடவேண்டும் என்று சொன்னார்கள்!''

ஆழ்வார்க்கடியான் தன் மண்டையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டு, ''இது கெட்டியாகத்தானிருக்கிறது! காளாமுக தாண்டவத்தைத் தாங்கக் கூடியதுதான்'' என்றான்.

''நான் கேள்விப்பட்டதற்குத் தகுந்தாற்போல் இன்றைக்கு நான் வரும் வழியெல்லாம் காளாமுகர்கள் மண்டை ஓடுகளையும் சூலாயுதங்களையும் தாங்கிக் கொண்டு அலைகிறார்கள். நீர் சிவனே என்று இந்த முன் குடுமி வேஷத்தை மாற்றிக் கொண்டு.....''

''முடியாது, அப்பா, முடியாது!''

''என்ன முடியாது?''

''நீ சொன்னாயே, அந்தப் பெயரைச் சொல்ல முடியாது. 'விஷ்ணுவே!' என்று சொல்லி எனது வேஷத்தை மாற்றிக் கொண்டாலும் மாற்றிக் கொள்வேன்.... அதோ பார்!''

ஆற்றங்கரைச் சாலையில் அப்போது ஒரு பல்லக்குப் போய்க் கொண்டிருந்தது. அதற்குள் ஒரு பெண்மணி இருப்பது தெரிந்தது. ஆனால் யார் என்று தெரியவில்லை. யாரோ ராஜ குலத்துப் பெண்ணாகத் தானிருக்க வேண்டும். யாராயிருக்கும்? பல்லக்குச் சுமப்பவர்களைத் தவிர ஒரு தாதிப் பெண் பக்கத்தில்



போய்க் கொண்டிருந்தாள். ஒரு வேளை அரசிளங்குமரியாயிருக்கலாமோ! அப்படியிருக்க முடியாது.

''வைஷ்ணவரே! அந்தப் பல்லக்கில் இருப்பது யார், தெரியுமா?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''தம்பி! நான் சொல்வதைக் கேள். உனக்குச் சம்பந்தமில்லாத காரியங்களில் தலையிட்டுக் கொள்ளாதே! அதனால் பல தொல்லைகளை நீ ஏற்கெனவே அனுபவித்திருக்கிறாய் அல்லவா! வழியோடு எத்தனையோ பேர் போவார்கள்; உனக்கு என்ன அதைப்பற்றி? குதிரை மேலேறிக் கொள்; தட்டிவிடு!'' என்றான்.

''ஓகோ! அப்படியா சமாசாரம்? வீர வைஷ்ணவர் இப்போது பெரிய வைராக்கியசாலி ஆகி விட்டதாகத் தோன்றுகிறது. வீர நாராயண புரத்தில் நடந்ததை மறந்து விட்டீரா? அங்கே மூடு பல்லக்கில் சென்ற பெண்ணுக்கு ஓலை ஒன்றைச் சேர்ப்பிக்கும்படி நீர் எனக்குச் சொல்லவில்லையா?''

''அதெல்லாம் பழைய கதை! இப்போது எதற்கு எடுக்கிறாய்?''

''போனால் போகட்டும். நீர் என்னோடு வழியில் வந்து சேர்ந்து கொள்வீர் என்று சொன்னார்கள். உமக்காகவே இத்தனை நேரம் மெள்ள மெள்ளக் குதிரையைச் செலுத்திக்கொண்டு வந்தேன். இனியாவது என்னோடு வரப்போகிறீரா, இல்லையா?''

''நீ குதிரையில் போகிறாய்! நான் கால் நடையாக வருகிறேன். நாம் எப்படிச் சேர்ந்து பிரயாணம் செய்ய முடியும். நீ கொள்ளிடக் கரையில் போயிரு. அங்கே நாளைக் காலையில் உன்னுடன் வந்து சேர்ந்து கொள்கிறேன்.''



ழ்வார்க்கடியான் வேறொரு இரகசிய வேலையில் ஈடுபட்டிருக்கிறான் என்றும், தன்னுடன் வரமாட்டான் என்றும் வந்தியத் தேவன் நிச்சயமடைந்தான். ''சரி! உமது இஷ்டம்!'' என்று கூறிக் குதிரை மீது தாவி ஏறிக் கொண்டான். தான் போக வேண்டிய திசையை நோக்கினான். வட கிழக்குத் திசையின் அடிவாரத்தில் கரிய மேகங்கள் திரள்வதைக் கண்டான்.

''வைஷ்ணவரே! இன்றுமழைபெய்யுமா?'' என்று கேட்டான்.

''அப்பனே! எனக்கு என்ன ஜோசியமா தெரியும்? ஐப்பசி பிறந்து விட்டதல்லவா? மழை பெய்தாலும் பெய்யும். நீ எல்லாவற்றுக்கும் சீக்கிரமாகக் குதிரையைத் தட்டி விட்டுக் கொண்டு போ! இராத்திரி தங்குவதற்கு ஏதேனும் ஒரு சத்திரம் சாவடியைப் பார்த்துக் கொள்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

வந்தியத்தேவன் அவ்விதமே குதிரையைத் தட்டி விட்டான். ''எனக்கு என்ன ஜோசியமா தெரியும்?'' என்று ஆழ்வார்க்கடியான் கேட்டது அவனுடைய மனத்தில் பதிந்திருந்தது. அதிலிருந்து குடந்தை சோதிடரின் நினைவு வந்தது. போகும் வழியிலேதான் அந்தச் சோதிடரின் வீடு இருக்கிறது. அவரைப் பார்த்து விட்டுப் போனால் என்ன? சோழ சிங்காதனம் ஏற ஆசைப்படுகிறவர்களுக்குள்ளே யாருக்கு அந்த அதிர்ஷ்டம் கிடைக்கப் போகிறது? பொன்னியின் செல்வரைத் துருவ நட்சத்திரத்துக்குச் சமமானவர் என்று குடந்தை சோதிடர் சொன்னாரல்லவா? அவரோ இராஜ்யம் ஆளுவதில் மனத்தைச் செலுத்தவே மறுக்கிறார்! இலங்கைச் சிம்மாதனத்தையும் மணி மகுடத்தையும் எவ்வளவு அநாயாசமாக மறுதலித்தார்? அவருக்குப் பல கண்டங்கள் நேரிடுமென்று சோதிடர் கூறியது ஓரளவு பலித்துத்தானிருக்கிறது. அதுபோலவே வருங்காலத்தில் அவர் மகோந்நதம் பெற்று விளங்குவார் என்பதும் பலிக்குமா? அது எப்படிச் சாத்தியமாகக் கூடும்?... என்னுடைய வாழ்க்கைக் கனவுகள்தான் எவ்வளவு தூரம் பலிக்கப் போகின்றன? என் முன்னோர்கள் காலத்தில் இழந்துவிட்ட இராஜ்யம் திரும்பக் கிடைக்குமா? நான் இப்போது எதற்காகப் புறப்பட்டிருக்கிறேனோ, அது எவ்வளவு தூரம்

நிறைவேறும்? ஆதித்த கரிகாலர், நந்தினி, — இவர்களுக்குக் குறுக்கே நின்று நான் எந்தக் காரியத்தையும் சாதிக்க முடியுமா? இதுவரையில் இரண்டு மூன்று தடவை நந்தினியிடம் சிக்கிக் கொண்டு தப்பிப் பிழைத்தோம்! மறுபடியும் அது முடியுமா? பழுவூர் இளைய ராணியை எண்ணிய போது வந்தியத்தேவனுடைய மனத்தில் ஒரு திகில் உண்டாயிற்று. அவள் அவனிடம் மிக்க பிரியமும் மரியாதையும் காட்டிப்பேசியதென்னமோ உண்மைதான்! ஆனால் அவள் உள்ளத்தை அவனால் அறிய முடியவில்லை. ஏதோ ஒரு முக்கிய காரிய நிமித்தமாக அவனை அவள் விட்டு வைத்திருப்பதாகவே தோன்றியது. அதனாலேயே வந்தியத்தேவனிடம்அவள் அவ்வளவு பொறுமையாக இருந்திருக்கிறாள். அது என்ன காரியமாக இருக்கும்?

வந்தியத்தேவனுடைய குதிரை சற்று முன் அந்த வழியே சென்ற பல்லக்கைத் தாண்டிச் சென்றது. இம்முறை அவன் பல்லக்கை மோதவும் விரும்பவில்லை. பல்லக்கு அவனை மோதவும் இஷ்டப்படவில்லை. ஆனால் குதிரை பல்லக்கைத் தாண்டிய போது பல்லக்கின் திரை சிறிது விலகியது. உள்ளே வீற்றிருந்த பெண் கொடும்பாளூர் இளவரசி வானதி என்பதை அறிந்து கொண்டான். குதிரையை நிறுத்தலாமா என்று ஒரு கணம் யோசித்தான். பிறகு அதை மாற்றிக் கொண்டு மேலே சென்றான். வானதியைப் பற்றி இளைய பிராட்டி கூறியது நினைவு வந்தது. நாலு புறமும் அபாயங்கள் சூழ்ந்த இக் காலத்தில் கொடும்பாளூர் இளவரசி தனியாக எங்கே புறப்பட்டாள்? தகுந்த பாதுகாப்புக் கூட இல்லையே? அதோடு இன்னொரு விசித்திரத்தையும் அவன் கண்டான். சற்றுத் தூரத்திலிருந்து பயங்கரத் தோற்றமுடைய இரண்டு காளாமுக சைவர்கள் வானதியின் பல்லக்கை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இவர்கள் எதற்காக அப்படிப் பார்க்கிறார்கள்? அவர்கள் இரண்டு பேரும் யார்? அரிச்சந்திர நதிக்கரையில் தான் படுத்துறங்கிய போது தன் பக்கத்தில் வந்து நின்று பேசியவர்கள் அல்லவா?

வானதியிடம் வந்தியத்தேவனுக்கு அவ்வளவு அனுதாபம் இல்லையென்பது உண்மையே. பொன்னியின் செல்வருடைய உள்ளத்தில் பூங்குழலி பெற வேண்டிய இடத்தை வானதி அபகரிக்க விரும்புவதாகவே அவன் எண்ணினான். அதனால் அவள் பேரில் கோபங்கொண்டிருந்தான். ஆனாலும் இளைய பிராட்டி அவளிடம் அளவற்ற அன்பு வைத்திருந்தாள் என்பதை அவனால் மறக்க முடியவில்லை. எனவே, வானதிக்கு ஏதேனும் அபாயம் நேர்ந்தால் இளையபிராட்டி அதனால் அளவில்லாத துன்பம் அடைவாள். ஆனால் அபாயம் எதற்காக நேர வேண்டும்? ''சம்பந்தமில்லாத காரியங்களில் தலையிட்டுக் கொள்ளாதே! உன் காரியத்தைப் பார்த்துக் கொண்டு போ!'' என்று ஆழ்வார்க்கடியான் கூறிய புத்திமதி நியாயமானதுதான். ஆயினும், வானதியின் பல்லக்குச் சென்றதைக் காளாமுகர்கள் இருவர் மறைவான இடத்திலிருந்து பார்த்துக் கொண்டு நின்ற காட்சி திரும்பத் திரும்ப அவன் ஞாபகத்திற்கு வந்து கொண்டிருந்தது.

இதோ குடந்தை சோதிடரின் வீடு வந்துவிட்டது! எல்லாவற்றுக்கும் அவரைக் கேட்டுப் பார்க்கலாம்.... அடடே! இத்தனை நேரம் அந்த விஷயம் மூளைக்கு எட்டவில்லையே? வானதி தேவியும் குடந்தை ஜோதிடர் வீட்டுக்குத்தான் வருகிறாள் போலும்! பழம் நழுவிப் பாலில் விழுந்தது! வானதி வந்து சேர்வதற்குள் நம்முடைய காரியத்தையும் நாம் பார்த்துக் கொள்ளலாம். இவ்வாறு எண்ணிச் சோதிடர் வீட்டு வாசலில் குதிரையை நிறுத்திவிட்டு வந்தியத்தேவன் அந்தச் சிறிய வீட்டுக்குள் நுழைந்தான்.

(தொடரும்)

# திறப்பு விழா

"செண்பகம்...! செண்பகம்...!"

பரபரப்புடன் கூப்பிட்டான், பரசுராமன். அந்த ஊர் அரசியல் கட்சி ஒன்றின் கிளைச் செயலாளர்.

செண்பகம், உள்ளேதான் இருந்தாள்.

செத்துப் போன வீரையனின் விதவை. மரத்துப் போன கட்டையாய், மலங்கு விழிப் பார்வையில், கலங்கிப் போன எதிர்காலத்தை நினைத்த பெருமூச்சுடன்...



ஐயோ... எப்படி இருந்த குடும்பம்! எத்தனை கனவுகளுடன் ஆரம்பமான வாழ்க்கை? அத்தனையும் இப்படியா, இத்தனை சீக்கிரமாகவா அர்த்தமே இல்லாமல் அஸ்தமித்துப் போக வேண்டும்...?!

"அம்மா... அப்பா இன்னும் எழுந்திருக்கலை."

கயிற்றுக் கட்டிலில் தலைகுப்புறச் சுருண்டு கிடந்த வீரையனைப் பார்த்துவிட்டு, விம்மும் ஏமாற்றத்துடன் சொன்னான், சரவணன்.

பழையதுக்குப் புளித்துவையல் அரைத்துக் கொண்டிருந்த செண்பகம், "அவர் எழுந்து உனக்கு என்ன ஆகப் போகுது?" என்று சிடுசிடுத்தாள்.

"நாற்பது பக்கக் காப்பி நோட்டு வேணும். என் கிளாசிலே எல்லாரும் வாங்கிட்டாங்க. நான்தான் பாக்கி. இன்னிக்கு வாங்கிக்கிட்டுப் போகல்லேன்னா டீச்சர் அடிப்பாங்க, அம்மா." ஐந்தாம் வகுப்புப் பிஞ்சுக் குரல், பயத்தால் பரிதவித்தது.

அப்போது கயிற்றுக் கட்டிலின் மொர... மொரச் சத்தம். உசும்பலும், முனகலுமாய் மெள்ளத் தலையைக் கிளப்பினான், வீரையன்.

"ஆமா... இலவசமா நோட்டுப் புத்தகம் கொடுப்பாங்களே... அதெல்லாம் இன்னும் கொடுக்கல்லையா?" என்று அதிகாரத் தொனியில் கேட்டான்.

"அதுக்கு நாளாகுமாம் அப்பா. அப்படிக் கொடுத்தாலும் அதிலே காப்பி நோட்டு இருக்காதுப்பா."

"பரதேசிப் பயலுக. காப்பி நோட்டு இல்லாமே என்ன இலவசம் வேண்டிக் கிடக்கு. இதெல்லாம் தலைவர் காதிலே போட்டு வைக்கணும்."

'தலைவர்!' இந்தப் பதத்தைச் சொல்லும் போதே புது உற்சாகமும், ஒரு மிடுக்கும் பரவ, விறைப்பாக எழுந்து நின்றான், வீரையன்.

செண்பகத்தின் முகத்திலோ, ஏமாற்றமும், அருவருப்பும் திரண்டன. "ஆமா... நீயும் கெட்டாய்... உன் தலைவரும் கெட்டாரு," என்று நெற்றியில் போட்டுக்கொண்டாள்.

"ஏய்... என்னை எது வேணாலும் சொல்லு. ஆனால்... தலைவரைப் பற்றி ஏதாவது சொன்னியோ... நாக்கை அறுத்துடுவேன்."

"ஹும்... நாக்கை அறுக்கிறது இருக்கட்டும்யா. புள்ளைக்கு நோட்டு வாங்கிக் கொடுத்து, அவனை ஸ்கூலுக்கு அனுப்பு. நேரமாச்சு."

"பத்து மணிக்குத்தானே ஸ்கூலு. ஒன்பதுக்குப் புறப்பட்டால் பத்தாதா?"

"பக்கத்து வீட்டிலே மணி ஒன்பதரை அடிச்சுட்டது, அப்பா," என்றான் சரவணன்.

"இவருக்கு எங்கே நேரம் தெரியப் போகுது. ராத்திரி முழுக்க ஊரைச் சுத்திட்டு

விடிய மூணு மணிக்குத்தானே வீட்டுக்கு வந்தார்?''

''நான் ஊரைச் சுத்தலேடி, கழுதை. இன்னிக்குச் சாயந்திரம் எங்கள் கட்சியில் கொள்கை விளக்கப் பிரசாரக்கூட்டம்போடுறோம். பொருளாளர் வந்து பேசப் போறார். அதுக்குப் பந்தல் போட்டு, தோரணம் கட்டிக்கிட்டிருந்தேன். தெரியுமில்லே.''

''ராத்திரி முழுக்கக் கண் முழிச்சு உழைச்சிருக்கிறியே. நோட்டு வாங்கக் காசு கொடு.''

''என்கிட்டே ஏது, காசு?''

''ம்க்கும்... இதைச் சொல்ல உனக்கு வெட்கமாய் இல்லை? ரோட்டு ஓரமா டீ அடிச்சிருந்தாலும் கொள்ளையாக் காசிருக்கும். நீ ராத்திரி முழுக்கத் தோரணம் கட்டிட்டு, நாற்பது பக்க நோட்டுக்குக் காசு இல்லைங்கறியே. பைசா பிரயோசனம் இல்லாமே, மாடா உழைக்கணும்னா உன் கட்சியிலே சொல்லிக் கொடுத்தாங்க?''

''ஏய்... மரியாதையாகப் பேசு. என்னை என்ன கூலிக்கு மாரடிக்கிறவன்னு நெனைச்சியா? இதெல்லாம் கட்சிக்காகச் செய்யற தியாகம்டி... உம்... தலைவரு பேசறதை எழுதறதைப் படிச்சிருந்தா உனக்கு அந்த அருமை தெரியும். நீ அடுப்பு ஊதுறவ தானே.''

''எனக்கொண்ணும் அடி மடியைப் பிடுங்கற உன் அரசியல் வேண்டாமய்யா. நீதான் உன் தலைவர் பேச்சைக் கேட்டுக் கேட்டு, சொந்தமா இருந்த சைக்கிள் கம்பெனியைத் துடைச்சுத் தலைமுழுகிட்டே. நானும் கேட்டிருந்தா, நடுத்தெருவிலேதான் நிக்கணும்.''

ஆமாம்.

'சரவணன் மிதிவண்டி நிலையம்' என்று போர்டு போட்டு, அந்த டவுன் பஞ்சாயத்தின் பிரதான சாலையில் சைக்கிள் கம்பெனி வைத்திருந்தான், வீரையன்.

பன்னிரண்டு புத்தம் புது சைக்கிள்கள். நாளொன்றுக்குச் செலவெல்லாம் போக ஐம்பது ரூபாய் நிற்கும்.

அந்த வட்டக்கிளை சார்பில், கட்சித் தலைவருக்குக் கார் பரிசளிக்கத் தீர்மானித்தார்கள்.

நன்கொடை, நன்கொடை என்று நாலு மாதமாக வசூல் அலைச்சல்.

கடையைக் கவனித்துக் கொள்ளச் சரியான ஆள் இல்லாமல், வாடகைக்குப் போன சைக்கிள்கள் வராமலே போய் — மிச்சம் இருந்த சைக்கிள்களையும் இட்டப்படி இரண்டு லட்சத்தை எட்ட வேண்டுமே, என்ற முனைப்பில் விற்றுப் பணமாக்கி, அந்த ஊர்க் கிளையின் காரியதரிசி என்ற 'பெருமையை' நிலைநாட்டிக் கொண்டான், வீரையன்.

''ஏன்'யா... தொண்டர்களின் நன்மையைக் காப்பதற்காகக் கார் வாங்கிக் கொண்ட தலைவரு, உங்க பிழைப்பிலே மண்ணை அள்ளிப் போட்டுட்டாரே. இதுதான் தொண்டர்களைக் காப்பாத்தற லட்சணமா?''

''நான் ஒண்ணும் சம்பாதிக்காமல் இல்லையே. அடுத்த சைக்கிள் கம்பெனியிலே சம்பளத்துக்குப் போயிட்டுத்தானே இருக்கேன்...''

''அம்மா.... ஸ்கூலுக்கு நேரமாச்சு.''

''ஓ... இவரோட வெட்டிப் பேச்சு பேசினதில் எனக்கு எல்லாமே மறந்துடுச்சு. இரு... இரு...'' என்று முந்தானையில் முடிந்திருந்த ஒரு ரூபாய் நாணயத்தைக் கணவனிடம் எடுத்துக் கொடுத்தாள், செண்பகம். ''சீக்கிரமாப் போய் முனைக் கடையிலே நோட்டு வாங்கிட்டு வந்து கொடுய்யா!''

''வேற காசு இல்லையா?''

''எப்படிய்யா இருக்கும். மில்லிலே கல் எடுக்கிற மெஷின் வந்துட்டதாலே, இப்ப யாரும் முன்ன மாதிரி என்னை அரிசி புடைக்கக் கூப்பிடறதில்லை. இது... கோழி முட்டை வித்த காசய்யா...'' என்று துயரத்தை மென்று விழுங்கினாள், செண்பகம்.

ஆனால், வீரையன் —

''தரித்திரம்... தரித்திரம்'' என்று முணுமுணுத்துக் கொண்டே வெளியேறினான்.

சின்னதான அப் பெட்டிக் கடையின் நெற்றியில் ஏகப்பட்ட போஸ்டர்கள்.

ஒரே செய்திக்கு ஒவ்வொரு தினசரியும், தன் கொள்கைக்குத் தகுந்த மாதிரி தலைப்புகள் தந்திருந்தது.

வீரையன் சார்பிலான கட்சி நாளிதழில்—

'தலைவரின் ஆவேசப் பேச்சு.

எதிரிகளுக்கு அதிரடி...!

தடி தடியான தலைப்புகளைப் பார்த்ததுமே வீரையனின் உடம்பில் முறுக்கேறியது.

தலைவர் பேசி இருக்கிறார்.. என் தலைவர் பேசி இருக்கிறார்... அதைப் படிக்க வேண்டும்... இப்போதே... இந்த நிமிஷமே...

செண்பகம் தந்த ஒற்றை ரூபாயை விட்டெறிந்து கட்சிப் பேப்பரைக் கொத்தி எடுத்தான். பீடியை உற்சாகத்துடன் பற்ற வைத்துக் கொண்டான்.

படித்தான்.

''ஆஹா... செமையான பேச்சு. எதிர்க்கட்சிக்காரங்க நாக்கைப் பிடுங்கிட்டுச் சாகணும். அப்படி கடுமையாய்ப் பேசி இருக்கிறார். அடடா... அந்தக் கூட்டத்திலே நான் இல்லாமல் போயிட்டேனே!'' ஆயாசம் பொங்க அலுத்துக் கொண்டான், வீரையன்.

அவன் தோளுக்குப் பின்னால் ஒசியில்

''போலீஸ் துறை உத்தரவுக்கு இணங்கி நம்பர் பிளேட்டைக் கொஞ்சம் பெரிசா எழுதி வச்சது தப்பாப் போச்சு!''

— குத்தாலம் அபிதா.

பேப்பர் படித்துக் கொண்டிருந்த கட்சித் தோழன், ''கவலைப்படாதே, வீரையா. அடுத்த வாரம் தலைவரு டவுனுக்கு வர்றாரு. பெரிய மீட்டிங்'' என்றான்.

''அப்படியா... பலே பலே... லாரி புக் பண்ணிப் போயிட வேண்டியதுதான்.''

''அதிருக்கட்டும். இன்னிக்குப் பேச வர்ற பொருளாளருக்கு நம் இளைச் சார்பில் கைத்தறி ஆடை போர்த்தணுமே. இருபத் தஞ்சு ரூபாயாவது வேணும்.''

''ஆளுக்கு ரெண்டு ரூபாய் வசூல் பண்ணுவோம்.''

''ஆளுங்க எங்கே இருக்கிறான்கள். அவனவன் வேலைக்குப் போயிட்டான். சாயந்திரம் ஆறு மணிக்குத்தான் வருவான்கள். அவனுங்க வந்து, வசூல் தண்டி, எப்போ பொருளாளருக்குத் துண்டு போர்த்தறது. அதெல்லாம் நடக்கற காரியமா? போர்த்தலேன்னா.. நீதான் இந்த ஊர் இளைக்காரியதரிசி. உனக்குத்தானே கெட்ட பேரு.''

''ஆமாம்... ஆமாம்.'' யோசித்துக் கொண்டே அவிந்து போன பீடியை மீண்டும் பற்ற வைத்துக் கொண்டான், வீரையன். ''இரு, வர்றேன்'' என்று எழுந்தான்.

நள்ளிரவு.

மெள்ளக் கதவைத் தட்டிக் கொண்டு உள்ளே நுழைந்தான், வீரையன்.

துவைத்துப் பிழிந்த துணி போல் அசந்து போய் உட்கார்ந்திருந்த செண்பகம் நிமிர்ந்தாள்.

''மீட்டிங் முடிஞ்சுதா?''

''ம்...!''

''என்ன பேசினாங்க?''

''அதெல்லாம் உன்கிட்டே சொல்லிட்டிருக்க முடியுமா?'' அலட்சியமாய் அவன் திரும்ப —

அடிப்பது போல் அவள், ''நான் சொல்றேன்!'' என்றாள்.

''பெத்த புள்ளை, நோட்டு இல்லாமல் போய், பள்ளிக் கூடத்திலே அடியும், உதையும் வாங்கி அவமானப்படணும். ஆனால், நோட்டு வாங்கக் கொடுத்த காசிலே எந்தத் தகப்பன் கட்சிப் பேப்பர் வாங்கிப் படிக்கிறானோ அவன்தான் உண்மையான தொண்டன்னு பேசி இருப்பார், இல்லையா....?''

''செண்பகம்...!''

''கட்டின பெண்டாட்டி, மாத்துத் துணி இல்லாம கஷ்டப்படணும். அவளுக்கு



இருபது ரூபாய்க்கு ஒரு நூல் புடைவை கூட வாங்கித் தரக் கூடாது. அது பாவம். ஆனால், தான் வேலை பார்த்த இரண்டு நாள் சம்பளத்தையும் எந்தக் கணவன் வாங்கிக்கிட்டுப் போய்க் கட்சிக்காரருக்குத் துண்டு வாங்கிப் போர்த்துறானோ அவன் தான் உத்தம சீலன்'னு பேசி இருப்பார், இல்லையா...?''

''செண்பகம்...!''

''ம்... பசியாலே கண்ணும், காதும் அடைக்கிறது. என் தலைவிதி... நான் தாங்கிக்கறேன். பாவம்.. என் புள்ளை மூணு நாளா சரியாச் சாப்பிடாமல் மூஞ்சி மூஞ்சியைப் பார்த்தான். நோட்டு வாங்கப் போன மனுஷனைக் காணோமேன்னு, சைக்கிள் கடைக்குப் போனேன். உன் பேரில் இருந்த இருபது ரூபாய்ச் சம்பளத்தையும், நீ வாங்கிட்டுப் போயிட்டதா முதலாளி சொன்னார். அந்த நிமிஷம் என் உடம்பு துடிச்ச துடிப்பு... நெஞ்சமே வெடிக்கிற மாதிரி பொங்கி வந்த அழுகை... கடவுளுக்குத்தான் தெரியும்...

''அஞ்சு ரூபாய்க்காக யார் யார்கிட்டயோ கடன் கேட்டேன். கிடைக்கல்லை. அப்புறம் தான் அந்த யோசனை வந்தது. கோழியை வித்துட்டாவது அரிசி வாங்கலாமேன்னு வந்தேன். பாவி...! எனக்கு முன்னே அதையும் நீ புடிச்சுட்டுப் போயிட்டியே...!''

''பொருளாளர், வெளியூர் கூட்டங்களுக்குப் போனால் கோழிதான் சாப்பிடுவாராம். அதான் புடிச்சுட்டுப் போனேன்...'' வீராப்புடன் விளக்கம் சொன்னான், வீரையன்.

''ஐயோ... ஐயோ.... இப்படி ஒரு மனுஷனா?'' தலையிலும், வயிற்றிலும் மாறி மாறி அடித்துக்கொண்டு குமுறி அழுதாள், செண்பகம்.

குழாயடியிலிருந்து திரும்பிக் கொண்டிருந்த செண்பகத்தின் முகம் மலர்ந்தது.

எதிரில் அவளது அப்பா வந்து கொண்டிருந்தார்.

''அப்பா... எப்ப வந்தீங்க.''

''இப்பத்தாம்மா வந்தேன். இந்த வருஷம் நம்ம பக்கம் எள் விளைச்சல் நல்லா இருந்ததும்மா. சந்தையிலே போட்டுட்டு உன்னையும் பார்த்துட்டுப் போகலாமேன்னு வந்தேன். சரவணனைப் பள்ளிக்கூடத்திலேயே பார்த்துட்டேன். மாப்பிள்ளை எப்படியம்மா இருக்கிறார்...?''

மிடறு விழுங்கியவளாய்த் தலைகுனிந்தாள், செண்பகம்.

''கவலைப்படாதேம்மா... உன் போதாத காலம். யாரைச் சொல்லி என்ன பண்ண முடியும். கட்சி.... கட்சின்னு இப்படி பேயாய் அலையற மனுஷனை நான் இப்பத்தாம்மா பார்க்கறேன்.''

ஈரிழைத் துண்டால் கடை விழியைத் துடைத்துக் கொண்டார், பெரியவர். இடம் தெரியாமல் பெண்ணைக் கொடுத்த ஏக்கம், அவரை மட்டும் உறுத்தாதா, என்ன?

''அம்மா செண்பகம். இன்னும் பத்து

நிமிஷத்துல பஸ் புறப்பட்டுடும். நான் போகணும். வழியிலே உன்னைப் பார்ப்பேனோ, மாட்டேனோங்கற சந்தேகத்திலே உன் கைச் செலவுக்காக நூறு ரூபாய் பக்கத்து வீட்டிலே கொடுத்திருக்கிறேன்மா. போய் வாங்கிக்கோ. நான் வரட்டுமா?''

தான் சமைப்பது போலும், சரவணன் ருசித்துச் சாப்பிடுவது போலும் அக்கணமே ஒரு குட்டிக் கனவு தோன்ற, ''சரி அப்பா'' என்று மகிழ்ச்சியுடன் விடைகொடுத்தாள் செண்பகம்.

ஆனால் அந்த மகிழ்ச்சி —

''என்ன... என் வீட்டுக்காரர் பணத்தை வாங்கிட்டுப் போயிட்டாரா...?'' என்று இடி விழுந்தது போல், அதிர —

''ஆமாம், செண்பகம். நீ வர்றதுக்கு முந்தி கடைக்குப் போய்ச் சாமானெல்லாம் வாங்கி வர்றேன்னு சொல்லிட்டுப் போனாரு. ஆனால்... இப்பத்தான் கடைப் பையன் சொன்னான்... உன் புருஷன் சாமானும் வாங்கல்லை. ஒண்ணும் வாங்கலை. டவுனிலே ஏதோ பொதுக் கூட்டமாம். அதுக்கு, லாரியிலே ஏறி, கூட்டத்தோடு கூட்டமாய்ப் போயிட்டாராம்'' என்ற போது விருட்டிச் சாம்பலாய் நீத்துப் போயிற்று.

அந்த அதிர்ச்சி —

பசிச் சோர்வு —

எரிச்சல், ஏமாற்றம், ஆற்றாமை — இத்தனையும் வாட்டி வதைக்க, இந்தத் தொடர் கதைக்கு முடிவுதான் என்ன என்று புலம்பிக் கொண்டிருந்தாள், செண்பகம்.

அப்போதுதான் அச் செய்தி வந்தது.

பொதுக் கூட்டத்துக்குச் சென்ற லாரி, மரத்தில் மோதி விபத்துக்குள்ளானதில் —

கேபின் ஓரமாகத் தொத்திக் கொண்டு சென்ற வீரையன் தூக்கி எறியப்பட்டு —

அந்த இடத்திலேயே 'இடம்' தேடிக் கொண்டான்.

''உம்... உம்... வழி விடுங்க வழி விடுங்க... தலைவர் வரப் போறார்'' என்று கட்டியக் குரல்கள் தினுசு தினுசாய் வாசலில் கேட்கின்றன.

பரபரப்பும், ஆரவாரமுமாக மக்கள் கூட்டம் நெருக்கியடித்துக் கொண்டு நிற்பதை, உள்ளுக்குள் இருந்த செண்பகம் உணர்ந்து கொள்கிறாள்.

சுவரோரமாக நாற்காலி போடப்பட்டு, வீரையனின் புகைப்படம் கொலுவிருக்கிறது. அதைக் கட்சிக் கொடியால் 'ஜிகினா' வேலைப்பாட்டுடன் மூடி வைத்திருக்கிறார்கள்.

அதைத் திறந்து வைத்து, பத்தாயிரம் ரூபாய் பரிசளிக்கப் போகிறார், தலைவர்.

மூடப்பட்டிருந்த கணவனின் படத்தைப் பார்த்துப் பெருமூச்சு விட்டாள், செண்பகம்.

தெருப் பெண்கள் எல்லாரும் செண்பகத்தைச் சூழ்ந்து கொண்டார்கள்.

அவர்களது பார்வையும், பேச்சும் அனுதாபமா, பொறாமையா, வக்கரிப்பா என்பது புரியாமல் ஒரு கலப்படமான சூழ்நிலையில் —

''தலைவர் வந்து விட்டார்.''

''தள்ளு... தள்ளுடோய்... தள்ளி நில்லுங்க.''

குனிந்து உள்ளே வந்து ஆஜானுபாகுவாய் நின்றார், தலைவர்.

பரசுராமன் — வீரையன் வகித்த கிளைச் செயலாளர் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருப்பவன் அவன்தானே. தயாராய்க் கொண்டு வந்திருந்த எவர்சில்வர் தாம்பாளத்தில் பணத்தை வைத்து —

''இந்தாங்க, அம்மா'' என்று நீட்டினார், தலைவர்.

சூழ்ந்திருந்த ஆண், பெண் அனைவரின் பார்வையும் ஆர்வமாய்ச் செண்பகத்தை நோக்க —

செண்பகம் சொன்னாள்:

''எனக்கு இந்தப் பணம் வேண்டாம், ஐயா...''

தலைவரின் முகம் குடைசாய்ந்தது.

''வேண்டாமா...! ஏன்?''

''இதை நான் வாங்கினால் வெளிச்சத்தில் மயங்கும் விட்டில் பூச்சியாய் இறந்து போன என் கணவர் தியாகி ஆயிடுவார். அவருக்குத் தப்பான வழி காட்டினவங்க எல்லாம் சரியான தலைவர்களா ஆயிடுவாங்க. வேண்டாம்... தயவு செய்து கொண்டு போயிடுங்க...''

''செண்பகம்! என்ன இது...? கடைசி நேரத்திலே குதர்க்கம் பேசுறே!'' அதட்டினான், பரசுராமன்.

''குதர்க்கம் இல்லை, ஐயா. மனசிலே பட்ட உண்மையைத்தான் சொல்றேன்.''

''சரி... வழி விடு. அண்ணன் படத்தையாவது தலைவர் திறந்து வைக்கட்டும்.''

''ஹும்..'' அலட்சியமாய் உதட்டை மடித்தாள், செண்பகம். ''எதுக்காக அவர் படத்தைத் திறக்கணும். நாளைக்குப் பெரிய மனுஷனா, பேப்பரிலே வர்றதுக்கா. அதனால் எனக்கென்ன பிரயோசனம்? மறுபடியும் என் வாழ்க்கை திறக்கப் போறதில்லையே!''

''செண்பகம்... நீ அதிகம் பேசுறே. தலைவர் நின்னுக்கிட்டிருக்கார். சீக்கிரம் வழி விடு.''

''முடியாதண்ணே'' அழுத்தம், திருத்தமாக அடித்துச் சொன்னாள், செண்பகம். ''என் புருஷன் படத்தை நீங்க திறக்காமல் இருந்தாத்தான், அவரை மாதிரி உணர்ச்சிப் பிண்டத்துக்கெல்லாம் அறிவுக் கண் திறக்கும். என்னை மாதிரி செண்பகங்கள் இனிமேலாவது விதவையாகாமல் இருப்பாங்க.. உம்.. போயிடுங்க... தயவு செய்து போயிடுங்க...''

காவிரி போல், கங்கை போல் பொங்கிய கண்ணீரை முந்தானையால் மூடிக் கொண்டு திரும்பினாள்.

''அம்மா... பசிக்குது'' என்று காலித் தட்டோடு நின்று கொண்டிருந்தான், சரவணன்.

# GOKULAM

Colour Transparency: K. V. Anand.



A Children's monthly in English

96 Pages

Price: Rs. 3.00 only..

August issue available now.

BUY GOKULAM, AND SEE YOUR CHILD'S FACE
LIGHT UP WITH JOY

| | | |
|---|---|---|
| Annual Subscription | : Rs. 36.00 | (India) |
| Overseas | : Rs. 270.00 | (Air Mail) |
| | : Rs. 120.00 | (Sea Mail) |

For agency and subscription contact : Gokulam, Guindy, Madras - 600 032. Phone : 434157, 434190.

# பெருமைமிகு பொட்டல் பாளையம்!

**எ**னக்கு இருந்த கடுப்பில், "போடா, உன் உத்தியோகமும் வேண்டாம், நீ கொடுக்கிற பிச்சாத்து சம்பளமும் வேண்டாம்!" — எனக் காலல் கடுதாக எழுதி முகத்தில் கடாசி விட்டுப் போய்விடலாம் என்று தோன்றியது.

ஆனால் முடியாது. முதலாவது — வங்கியின் சேர்மன் இங்கு இல்லை; இரண்டாவது எனது மானேஜர் உத்தியோகத்துக்கு இந்தத் தனியார் வங்கி கொடுக்கும் பிச்சாத்து சம்பளத்தில்தான் வண்டி ஓடிக் கொண்டிருக்கிறது. இதையும் விட்டால் பூவாவுக்கே லாட்டரிதான்!

முதலில் தஞ்சாவூரில் போட்டிருந்தார்கள். சமர்த்தாய் வேலையைப் பார்த்துக் கொண்டு எஞ்சிய வேளைகளில் கோவில், குளம் என்று புண்ணியம் தேடிக் கொண்டிருந்தேன். மேனேஜ்மெண்டுக்குப் பொறுக்கவில்லை.

திருநெல்வேலிப் பக்கம் புதிதாய் அபிவிருத்தி ஆகிக் கொண்டிருந்த பகுதியில் கிளையைத் திறந்து, கையில் டிரான்ஸ்ஃபர் லெட்டரைக் கொடுத்து என்னைத் துரத்தி விட்டார்கள்.

பொட்டல்பாளையத்தில் பிராஞ்சை ஆரம்பித்தால் எவன் வருவான். பாளையம் உண்மையிலேயே பொட்டல்காடுதான்.

வங்கிக்கு வெளியே காற்று பிய்த்துக் கொண்டு போகும். உள்ளேயும்தான்!

வங்கி குவார்ட்டர்ஸ் ும் தயாராகவில்லை.

திருநெல்வேலியில் இருந்த ஒன்றுவிட்ட சித்தப்பா வீட்டில் அரக்கப் பரக்கக் காலையில் எழுந்து சேவலோடு சேர்ந்து கூவி விட்டுக் காலை நேரச் சமாசாரங்களை முடித்து விட்டுக் கிளம்பினால் சரியாய் இருக்கும்.

ரோடும் படுமோசமான ரோடு. ஒவ்வொரு குண்டு குழியிலும் ஸ்கூட்டர் ஏறி இறங்கும் போது 'ஏலேலோ ஐலஸா' பாடிய படியே ஸ்கூட்டர் டயர் கழன்று கொள்ளாமல் பத்திரமாக இருக்கிறதா என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்.






**வ**ங்கி டெபாஸிட்டுக்காக நாயலை, பேயலை அலைந்ததில் அலைச்சல்தான் மிச்சம். அப்படியொன்றும் பிரமாதமான வட்டி விகிதம் தந்து விடுவதில்லை எங்கள் வங்கியில். பத்து சதவீதம்தான். முதல் கிளை திறந்த போது நிர்ணயித்தது: அதோடு சரி!

டவுன் வாழ்க்கை பிடிக்காத சிலர் பெருமைமிகு பொட்டல் பாளையத்தில் வீடு கட்டிக் கொண்டு வந்திருந்தார்கள். ஒரு வசதியானவரைத் துரத்தியடித்து, ஒரு மாலை வேளையில் பிடித்து, டெபாஸிட் தேவையென ஒரு பாட்டம் அழுததில், ''எவ்வளவு சதவீதம் வட்டி தர்றீங்க?'' என்று கேட்டார்.

நான் 'பத்து' என்றதும் 'நீசா' என்பது போல் பார்த்து, விக்கிரமாதித்தன் சிரிப்புச் சிரித்தார்.

நான் பேந்தப் பேந்த விழிக்க, ''தம்பி என்கிட்ட டெபாஸிட் பண்ணினா இருபது சதம் வட்டி தர்றேன்!'' — என்றார். எனக்கு நாய்க் குடையில் தூக்குப் போட்டுக் கொண்டு சாகலாம் என்று தோன்றியது.

நான் கெஞ்சிய கெஞ்சலில் மனுஷன் கொஞ்சம் இரக்கப்பட்டுப் போனார். கடைசியில் தன் கடைக்குட்டி பெயரில் மூன்று வருடத்திற்கு 'ரெக்கரிங் டெபாஸிட்' ஒன்று சேர்ந்தார். மாதம் ஐந்து ரூபாய்! சரி! வந்த வரைக்கும் 'லாபம்டா கண்ணு' என்று விண்ணப்பத்தைப் பூர்த்தி செய்து கையெழுத்து வாங்கிக் கொண்டேன். நூறு ரூபாய்த் தாளை நீட்டினார்.

''சார், சில்லறையில்லையே!'' என்றேன்.

''ஒண்ணு செய்யுங்க, எல். ஐ. ஸி. பாலிசி எடுத்தா ஏஜெண்டுங்க சில பேர் முதல் ப்ரீமி

யத்தை அவங்களே கட்டுவாங்க. அது மாதிரி இதுக்கு நீங்களே போட்டுக்கங்களேன்!'' — என்றபடியே நூறு ரூபாய்த் தாளை மடித்துப் பையில் திணித்துக்கொண்டார்.

'அடேய் உலக மகா அல்பம்' என்று மனத்துக்குள்ளேயே திட்டிக் கொண்டு 'நோ ப்ராப்ளம் சார்!' என்று அசடு வழிந்து விட்டு வந்து சேர்ந்தேன்.

பொட்டல்பாளையத்தில் அறிமுகமான நண்பர் ''லெக்சரர் ஒருத்தர் இருக்கார், அறிமுகப்படுத்தறேன் வா'' என்று அழைத்துப் போனார். அவர் வீட்டிலிருந்த சகல ஜீவன்களையும் அபிப்பிராயம் கேட்டு என் ஆவலைத் தூண்டினார்.

கடைசியில் இருபது ரூபாய் கொடுத்துச் சேமிப்புக் கணக்கைத் துவக்கினார். இது இரண்டாவது உலக மகா அல்பம்! இப்படியாக என் டெபாஸிட் தேடுபடல சோகத்தைத் தொடர்ந்தது.

**பா**ங்கைத் திறந்து வைத்து விட்டு 'ஓ' வென்று பொட்டல்வெளியைப் பார்த்துக் கொண்டிருக்கும் எனக்கு விஞ்ஞானிகள் 'இன்னும் இருநூறு வருடங்களில் இந்தியா பாலைவனம் ஆகிவிடும்' என்று சொன்னது உண்மைதான் எனத் தோன்றியது.

போதாக்குறைக்கு வங்கிக்கு எதிரே ஒரு கள்ளச் சாராய விநியோக மைய மண்டலம். அக்கம் பக்கத்துக் கிராமங்களுக்கு இங்கிருந்து விநியோகமாயிற்று.

ஒரு நாள் அதிகாலையில் வங்கி திறந்த வேளையில் கடா மீசையோடு ஒருவன் ஃபுல்லாகப் போட்டு விட்டு, நிற்கக் கூட முடியாமல் உள்ளே நுழைந்து விட்டான்.

''வாத்தியாரே இன்னும் நூறு ஊத்து'' என்றதும் என் பாடு தர்மசங்கடமாகிப் போனது. அஷ்டகோணலாக முகத்தை வைத்துக் கொண்டு ''யோவ் இது பாங்குய்யா'' — என்றேன்.

அவன் படு கோபமாய், ''யோவ் நீ சும்மா ஊத்த வேணாம், துட்டு கொடுத்துடறேன்'' — என்றான் வாய்குளறியபடி. அவனை வெளியேற்றுவது பிரம்ம பிரயர்த்தனமாகி விட்டது.

''....யோவ் துட்டு கொடுத்துக் கேட்டா கூட ஊத்த மாட்டேன்றே, நாளைக்கு உன் கடைக்கு வேட்டு வச்சுடறேன்'' — போகும் போது அவன் புலம்பிக் கொண்டே போனான்.

நானே சந்தேகத்துடன் சுற்றும் முற்றும் பார்த்து வங்கிதான் என ஊர்ஜிதப்படுத்திக் கொண்டேன்.

**ஒ**ருமுறை மாடு வாங்க லோன் கேட்டு வந்து நின்றான் ஒருத்தன். எனக்குப் பகீரென்றது.

இப்படித்தான் குற்றாலம் பிராஞ்சில் சக மானேஜர் மாடு வாங்க லோன் கொடுத்து

விட்டு, அவன் பின்னே பணம் வாங்க அலைந்து, கடைசியில் மாட்டைப் பிடித்து வந்து வீட்டுக் கொல்லையில் கட்டி, பால் கறந்து கறந்து விற்று, கணக்கில் வரவு வைத்தது நினைவுக்கு வர, அரண்டு வாயில் வந்த ஒரு பேரைச் சொல்லி, 'அந்த வகை மாட்டுக்கு மட்டும்தான் லோன் தருவோம். கொட்டேஷன் கொண்டு வா' என, அவன் நான் சொன்ன 'ஜன்கா' என்ற பெயரை முணுமுணுத்துக் கொண்டே போய்ச் சேர்ந்தான்.

மானேஜர் இளமையாய் இருந்தால் இன்னும் ஒரு சங்கடம்! அது என்னையும் விட்டு வைக்கவில்லை. ஒரு பௌர்ணமி காலையில் கோதை நாயகி அம்மாள் உடம்பெல்லாம் நகையுடன் வந்து சேர்ந்தாள். கணக்கு ஆரம்பிக்க (வங்கிக் கணக்குதான்). புருஷன்காரன் டிஃபென்ஸில் இருப்பதாய்ச் சொல்லி 'டிஃப்பரெண்'டாய்ச் சிரித்தாள். எனக்குக் கையும் ஓடலை! காலும் ஓடலை!

''விசாலக் கிழமை வீட்டுக்கு வாங்களேன், பாவம் பச்சப்புள்ள வீட்டுச் சாப்பாட்டை மறந்திருப்பீக!'' என அழைப்பு விட, நான் குழறி, சித்தப்பா வீட்டில் இருப்பதைக் கூற, "பரவாயில்ல ஒரு மத்தியானத்துல வர்றது'' என மர்மமாய்க் கண்ணடித்து ஒரு வெட்டு வெட்டிப் போனாள்.

எனக்குப் பயம்! எக்குத்தப்பாய் ஏதேனும் நடந்து, ஊர் ஜனங்க, ''எனக்கு அப்பவே தெரியும்பா, இளவட்டம், சும்மாயிருக்குமான்னு நினைச்சேன், கையை வச்சுட்டான்'' — என ஆளுக்காள், புளிய மரத்தில் கட்டி வைத்து என்னை 'மொங்கு மொங்கு' என்று மொங்குவதாய் ஒரு கற்பனை. பயத்தில் வியர்த்தது.

**த**னியார் வங்கியில் இன்னொரு தர்ம சங்கடம்.

சேர்மனுக்கு மாமன் புள்ளை, மச்சான் புள்ளை, பத்து வருஷத்துக்கு முன்னாடி பக்கத்து வீட்டில் குடியிருந்தவன் பொண்ணு இப்படி வரிசையாய் நுழைந்து விடும். இதுகளை அதட்டவும் முடியாது; புரட்டவும் முடியாது.

சோதனையாய்ப் பொட்டல்பாளையத்திற்கு வகைக் கொன்றாய் வந்து சேர்ந்தது. கஸ்டமர் ஒருவர் பணம் கட்ட, 'பே—இன்—ஸ்லிப்'பைக் கேட்க, நம்ம ஆள் பேந்த விழித்து 'வித்ட்ராயல் ஸ்லிப்'பை எடுத்துக் கொடுக்க அவர், ''என்னடா எழவு! சகுனமே சரியில்லையே'' என்றபடியே போய் விட்டார். பணம் கட்ட நாள் நட்சத்திரம் பார்த்து வந்திருப்பார் போலிருக்கு!

ஒரு டைப்பிஸ்டும் கிடையாது. நம்ம சமர்த்து 'எனக்குத் தெரியும்' என்று முக்கியமான லெட்டரை எடுத்துப் போய் 'டியர் சார்' அடித்து, காற்றில் காகிதங்களைப் பறக்க விட்டு, படு ஸீரியஸாய்ப் பொறுக்கி, இரண்டாம் பக்கத்தை முதலில் அடித்துக் கொண்டிருந்தது. தலையெழுத்து!

**தி**டீரென்று ஒருநாள் காஷியர் அந்த நல்ல செய்தியைக் கொண்டு வந்தார். பொட்டல்பாளையம் பக்கத்தில் பெரிய இண்டஸ்ட்ரியல் ஏரியா உருவாகப் போகிறது என்றார்.

எனக்குப் படு குஷியாகிப் போனது.

உண்மையிலேயே என் ஊர் இனி பெருமைமிகு பொட்டல்பாளையம்தான்! தொழிற்சாலை ஆரம்பித்தால் கூடவே குவார்ட்டர்ஸ், பள்ளிக்கூடம் மற்றும் அதைச் சார்ந்த இன்ன பிற சமாசாரங்கள் எல்லாம் தோன்றும்.

புது கணக்குகளுக்கும், டெபாஸிட்டுக்கும் வழி பிறக்கும்.

இப்படி மகிழ்ந்து நான் புளகாங்கிதம் அடைந்திருந்த வேளையில்தான் மாலைத் தபாலில் அந்தக் கடிதம் வந்து சேர்ந்தது.

''டியர் பிரசாத்,

சென்னையிலிருந்து ஆந்திரா போகும் வழியில் திண்ணனூரில் புதியதாய்த் திறந்துள்ள நம் வங்கி கிளைக்கு உங்களை மாற்றியிருக்கிறோம். அது புதியதாய் அபிவிருத்தி ஆகிக் கொண்டிருக்கும் பகுதி. ஆகஸ்டு 25 அன்று அங்கே பொறுப்பேற்கவும். 23—ஆம் தேதி பொட்டல்பாளையத்திற்குப் புது மானேஜர் பொறுப்பேற்க வருவார், பெஸ்ட் ஆஃப் லக்!

வங்கி சேர்மன்''

என்றிருந்தது.

எனக்கு மயக்......

---

நண்பர்: உன் மாமனார் செத்துப் போன பிறகு, அவருடைய சொத்தில் உனக்குக் கிடைத்தது வெறும் ஐந்நூறு ரூபாய் தானா?

மற்றவர்: ஹும்... அதையேன் கேட்கறீங்க? நான் கொடுத்து வச்சது அவ்வளவுதான்!

நண்பர்: அடக்கடவுளே, அந்த ரூபாயும் நீ ஏற்கெனவே கொடுத்து வச்சது தானா?

— டி. எஸ். வி. மாதேசுவரன்.



என்ன நீலு சார்,
நீங்க ஏன் எப்போதுமே
"பிஸ்லேரி கிளப் சோடா"வையே
குடிக்கிறீங்க.'



சோடான்ன, தண்ணீரும் கார்பன்-டை-ஆக்ஸைடும் சேர்ந்து தயாரிக்கிறது மட்டுமில்லை. சோடா பாட்டிலும் சுத்தமாக இருக்கவேண்டும். சென்னை பாட்லிங் கம்பெனியில் EBI – அதாவது எலக்ட்ரானிக் இயந்திரம் கவனிப்பில் பாட்டில்கள் நிறைக்கப்படுகிறது. துளி அழுக்கு, தூசி இருந்தாலும் பாட்டில்கள் வெளிதள்ளப்படும். அதை நானே நேரில் பார்த்தேன். ஆகவே "பிஸ்லேரி கிளப் சோடா" மிகவும் சுத்தமாக தயாரிக்கப்படுகிறது. அதனாலே தான் "பிஸ்லேரி கிளப் சோடாவை" நான் எப்பொழுதும் விரும்பி குடிக்கிறேன்.




**"Bisleri CLUB Soda"**

தயாரிப்பாளர் :

சென்னை பாட்லிங் கம்பெனி லிட்.
423, பூந்தமல்லி நெடுஞ்சாலை
சென்னை — 600 106.
தொ.பே. 420440, 420755, 425150.

200 கோடி ரூபாய் புழக்கமுள்ள சக்தி குழுவின் ஓர் அங்கம்.

# உங்கள் மகனுக்கு ஓர் அரிய வாய்ப்பு!



- இலவசக் கல்வி—தங்குமிடம், உணவு, உடை இதர வசதிகளுடன்
- ரூ. 15,000/- வெகுமதி
- வேலை வாய்ப்பிற்கு உத்திரவாதம்

ஸம்ஸ்க்ருதம், வேதங்கள் மற்றும் திவ்யப்ரபந்தங்கள் கற்று ஓ.எஸ்.எல்.ஸி. (Oriental School Leaving Certificate), பண்டிதர், மற்றும் சிரோமணி (எம்.ஏ.,க்கு இணையாக அங்கீகரிக்கப்பட்டது) வரை படிக்கலாம்.

வேதாந்த பாரம்பர்யத்தில் பற்று கொண்ட 8 முதல் 14 வயது வரையான சிறுவர்கள் சேரத் தகுதியானவர்கள்.
ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா பங்குனி மற்றும் சித்திரை (March-April 1988) இதழ்களில் முழு விவரங்களும் பிரசுரிக்கப் பட்டுள்ளன. இவற்றை ஸம்ஸ்க்ருத கல்லூரி முதல்வரிடமிருந்தும் பெறலாம்.

உடனே விண்ணப்பிக்க வேண்டிய முகவரி:

The Principal,
Sri Ahobila Mutt
Sanskrit College,
MADURANTAKAM
PIN - 603 306

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு — V**
**ராஜ்மோகன் காந்தி**

# நியமனத்தை எதிர்த்து நீதிமன்றத்தில் வழக்கு!

அகில இந்தியாவுக்கும் தலைவராக, கவர்னர் ஜெனரல் பதவியை வகித்த ஒருவர், மாநிலத் தலைமைப் பதவியை ஏற்றுக்கொண்டிருக்கவேண்டுமா? 'கூடாது' என்று கருதியவர்களில் கல்கி கிருஷ்ணமூர்த்தி ஒருவர். தமது பத்திரிகையில் ராஜாஜி இதற்குச் சம்மதிக்கக் கூடாது என்று வற்புறுத்தித் தலையங்கம் எழுதினார். இந்தப் பேச்சு ஆரம்பமான உடனேயே, "ராஜாஜியின் தலைமை — நடவாத வெறும் பேச்சு" என்று தலைப்பிட்டுத் தலையங்கம் எழுதிய அவர், "ராஜாஜியை முதலமைச்சராகப் பதவி ஏற்குமாறு கேட்டுக்கொள்வது ரமண மகரிஷியைத் திருவண்ணாமலை நகரசபையின் தலைவராகப் பொறுப்பேற்குமாறு கோருவதற்கு ஒப்பாகும்" என்று தமக்கே உரிய பாணியில் நகைச்சுவை இழைய எழுதியிருந்தார். 'ராஜாஜி முடிந்தமுடிவாக முதல்வர் பதவி ஏற்கமறுத்து விட்டார்' என்று சில பத்திரிகைகள் தவறான செய்தியை வெளியிட்டபோது டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், "உங்கள் சுயகௌரவத்தைக் காப்பாற்றிக்கொள்ளுங்கள்" என்று ராஜாஜிக்குக் கடிதம் எழுதினார். தேசபக்தர் டாக்டர் ராஜன், ஸி. ஆரின் நீண்ட நாள் நண்பர் என்பதோடு முப்பதுகளின் இறுதியில் ராஜாஜி அமைத்திருந்த மந்திரிசபையில் அமைச்சராகப் பணியாற்றியவர். எதிர்க்கட்சித் தலைவர் தென்னேடி விசுவநாதன், "ராஜாஜியை நாங்கள் அகில இந்திய மட்டத்தில் தலைவராக எண்ணியிருந்தோமே தவிர, மாகாண மட்டத்தில் அல்ல" என்று கூறினார்.

இவையெல்லாம் ராஜாஜிக்குத் தெரியாதது அல்ல. பிறகு ஏன் ஏற்றுக் கொண்டார்? நேருவுக்கு அவர் எழுதிய ஒரு கடிதத்தில் காணப்படும் வரிகள்தாம் பதில். "எந்த வேலையானாலும் சரி, அது உன்னதமானது, கௌரவமானது என்ற மனப்பக்குவத்துடன் பணியாற்ற வேண்டும்; கடமை அழைக்கும்போது அதனை மறுக்காமல் ஏற்க வேண்டும்" என்ற இரு அம்சங்களைக் குறிப்பிட்டிருக்கிறார் ராஜாஜி. இவைதாம் அவர் மனத்தில் கனமாகக் குடியிருந்து அவர் ஒரு முடிவுக்கு வர உதவியிருக்க வேண்டும்.

அவருக்கு வயது எழுபத்திமூன்று. நாட்டுக்காக ஐம்பதாண்டுகளுக்குமேல் பல தியாகங்களைச் செய்தும் பல கஷ்டங்களை அனுபவித்தும் பல பொறுப்புக்களையும் பதவிகளையும் ஏற்றும் திறம்படப் பணியாற்றியாகிவிட்டது. இப்போது அவர் அமைதியான ஆன்மீக வாழ்க்கை நடத்த ஏங்கினார். ஆயினும் அந்த விருப்பத்தை உள்ளடக்கிக் கொண்டு, முதல்வர் பதவி உடலுக்கு அளிக்கக் கூடிய சிரமங்களையும், அறிவுக்கும் ஆற்றலுக்கும் அளிக்கக் கூடிய சவால்களையும் ஏற்கத் தயாரானார். இதனைப் பலர் உணர்ந்தனர். கல்கி கிருஷ்ணமூர்த்தி, "நடவாதது நடந்து விட்டது" என்ற தலைப்பில் தலையங்கம் எழுதி இதே கருத்தைத்தான் வெளியிட்டார். ஸி. ஆரின் ஆப்த நண்பர் நவரத்ன ராமராவ் தமது கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டார்:

"கடமை அழைக்கிறது; தவிர்க்க முடியாத அளவில் அந்த அழைப்பு வலிமை பெற்றும் இருக்கிறது; அதுதான் இந்த மகத்தான தியாகத்தைப் புரியுமாறு உங்களைத் தூண்டியிருக்கிறது. கடவுள் உங்களுக்குச் சக்தியையும்

• ராமராவ்:
"மகத்தான தியாகம்"





• நேரு: [illegible]



• அல்லாடி: "தவறோ குற்றமோ இல்லை."

நீதிபதி: குற்றவாளி எல்லாவற்றையும் ஒதுக்கிவிட்டு டீ.வி. பெட்டியைத் திருடியதிலிருந்தே அவர் மனநிலை சரியில்லாதவர் என்று தெரிவதால் குற்றவாளியை மன்னித்து விடுதலை செய்கிறேன்!''

— கீழை. அ. கதிர்வேல்.

வெற்றியையும் அளிக்கட்டும்.'' (1.4.52).

**ரா**ஜாஜி பதவி ஏற்றதை கம்யூனிஸ்ட்கள் எதிர்த்ததில் வியப்பில்லை. நியமன அங்கத்தினராகி முதல்வர் பதவி ஏற்றது சரியல்ல என்று அவர்கள் நீதிமன்றத்துக்குப் போனார்கள். நீதிமன்றம் ராஜாஜியின் நியமனமும் முதல்வர் பதவி ஏற்பும் சட்டரீதியாகச் சரியானவையே என்று தீர்ப்பு வழங்கி கம்யூனிஸ்ட்களின் வழக்கைத் தள்ளுபடி செய்தது. இந்தத் தீர்ப்பு ராஜாஜி எதிர்பார்த்த ஒன்றே. அவருக்குத் தெரியாத சட்டம் இல்லை என்பது ஒருபுறமிருக்க, அல்லாடி கிருஷ்ணசாமியின் கருத்தையும் முன்னதாகவே கேட்டறிந்திருந்தார். ரொம்பக் கவனமாகச் சட்டப் பிரச்னைகளை அணுகும் வழக்கறிஞரான அவர், ராஜாஜிக்கு 'இதில் தவறோ குற்றமோ எதுவுமே இல்லை' என்று உறுதியளித்திருந்தார். சட்டசபையில் எதிர்க்கட்சியினர் முன் தமது செயலைத் தாமே நியாயப்படுத்த வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டபோது ராஜாஜி கூறினார்:

அரசியல் சாசனத்தில் 164—வது பிரிவு எதற்காக இருக்கிறது? அதனை வெற்று வார்த்தைகள் என்று ஒதுக்கிவிட முடியுமா என்ன? அரசியல் சாசனத்தை உருவாக்கியவர்கள் அதற்கு அவசியம் இருக்கும் என்ற எண்ணத்தில்தானே அதனைச் சேர்த்திருக்கிறார்கள்? மக்களால் தேர்ந்தெடுக்கப்படாத ஒருவரைச் சமுதாய நலனைக் கருதிப் பதவி ஏற்குமாறு கோர வேண்டிய சந்தர்ப்பச் சூழ்நிலை ஒருவேளை ஏற்படலாம் என்ற எண்ணத்தில்தானே இந்த ஷரத்தை உருவாக்கியிருக்கிறார்கள்? என்னால்தான் இந்தச் சமுதாயம் காப்பாற்றப்பட முடியும் என்பதற்காக நான் இதைச் சொல்லவில்லை. அரசியல் சாசனத்தின் அந்த ஷரத்துக்கு ஓர் அர்த்தமிருக்கிறது: காரண காரியத்துடன் அது உருவாக்கப்பட்டிருக்கிறது என்பதற்காகக் கூறுகிறேன்.''

**நே**ரு இதனை எப்படி எடுத்துக் கொள்வாரோ என்ற கவலை பலருக்கும் இருந்தது உண்மை. 'ஓர் இக்கட்டான நிலையில் உதவ முன்வருகிறேன்; ஆனால் இந்த வயதுக் காலத்தில் என்னைத் தேர்தலில் நிற்கச் சொல்லிக் கட்டாயப்படுத்தாதீர்கள்' என்று ராஜாஜியின் நிபந்தனை. பதவிக்கு அவர் ஆசைப்படவில்லை. இந்த நிபந்தனையை ஏற்க முடியாதென்றால் சரி, அவருக்குச் சந்தோஷமே. ராமாயணத்தின் இலக்கிய நயங்களிலும் ஆன்மீக உணர்விலும் மூழ்கித் திளைக்க அவர் தயார். ஆனால் நேருவோ, 'ஆறு மாதங்களுக்குள் ராஜாஜி தேர்தலைச் சந்திக்க வேண்டும்' என்றே தம்மைப் பார்க்க வந்த தூதுக் குழுவினரிடம் கூறியிருந்தார். குமாரசாமி ராஜாவுக்கு ஒரு நம்பிக்கை: 'ராஜாஜியின் பதவி ஏற்பு வைபவமெல்லாம் முடிந்த பிறகு நேருஜிக்கு ராஜாஜியின் நிபந்தனை பற்றித் தெரிய வந்தால் பரவாயில்லை; ஏற்பாட்டைக் கலைக்க அவர் முன்வர மாட்டார்' என்று கருதினார்.

ஸி. ஆருக்கு ஏப்ரல் 2—ஆம் தேதி ஸ்ரீபிரகாசா எழுதிய கடிதம், நேரு இந்த நிலவரத்தை எப்படி ஏற்றுக் கொள்வாரோ என்ற கவலை மற்றவர்களைப் போல் அவருக்கும் இருந்ததை உணர்த்துகிறது:

'சமீபத்திய அரசியல் நிலவரங்கள் பற்றி நான் ஜவாஹர்லாலுக்கு அனுப்பிய இரு தந்திகளுக்கும் நீண்ட கடிதத்துக்கும் இது வரை பதில் ஏதுமில்லை. சாதாரணமாக அவர் உடனுக்குடன் பதில் எழுதுவார். இந்த மௌனம் எனக்குச் சிறிது கவலையளிக்கிறது. இருப்பினும் எல்லாம் நல்ல விதமாக முடியும் என்றே எதிர்பார்க்கிறேன். இது ஒருபுறமிருக்க, எடுக்கப்பட்ட முடிவுகள் அத்தனைக்கும் நான் முழுப் பொறுப்பு ஏற்றுக் கொள்கிறேன். பிரதமருக்கு இதில் மாற்றுக் கருத்து இருக்கும் என்றால் அது எனக்கு மிகுந்த ஆச்சரியத்தையே அளிக்கும்.''

கவர்னரின் நம்பிக்கை வீண் போகவில்லை. 'ஸி. ஆர். தேர்தலைச் சந்திக்கப் போவதில்லை என்பதில் உறுதியாக இருக்கிறார்' என்று ஸ்ரீபிரகாசா அனுப்பிய தகவல், சில நாட்களுக்கு நேருவை வருத்தத்தில் ஆழ்த்தியது என்றாலும் சீக்கிரமே மனம் மாறி, ஸி. ஆர். அமைக்கவிருந்த மந்திரி சபை பற்றி அவருடன் நேசத்துடன் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டார் நேரு.

அமைச்சரவையை உருவாக்குவது என்ற சிக்கலான காரியத்துக்கு எட்டு நாட்கள் எடுத்துக் கொண்டார் ஸி. ஆர். அவர் மனத்தில் என்ன இருக்கிறது என்று யாருக்குமே தெரியவில்லை. ஒன்பதாவது நாள் உறுதியாகச் செயல்பட்டார். தம்மையும் சேர்த்துப் பதினைந்து பேர்கள் அடங்கிய அமைச்சரவையை அறிவித்த கையோடு, ''நியமனங்கள் பூர்த்தியாகி விட்டன'' என்றும் இட்டவட்டமாக அறிவித்தார். பலருக்குத் தங்கள் அதிர்ஷ்டம் பற்றி நாளிதழ் அல்லது வானொலி மூலமாகத்தான் தெரிய வந்தது! ஏப்ரல் பத்தாம் தேதி அவர்கள் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்டனர்.

(தொடரும்)

# 19 இருள் வரும் நேரம்



பாபு ஓடி, சந்து திரும்புவதற்குள் தர்மராஜன் சுட்டுவிட்டார். குண்டு அவன் காலின் பின்பகுதியில் பட்டுச் சுரீர் என்று வலித்தாலும், எங்கிருந்தோ வந்த பலத்திலும் பயத்திலும் பாபு நொண்டிக் கொண்டே ஓடினான். தர்மராஜன் தொடர்ந்து சுடுவது குறி தவறினால் ஆபத்து என்று ஜீப்புக்குள் பாய்ந்து அந்த சந்துக்குள் செலுத்தச் சொல்லி அங்கே இறங்கிக் கொண்டார். பாபு மற்றொரு சந்து திரும்புவதைக் கடைசி கணத்தில் கவனித்தார். அவன் ஓடியிருந்த பாதையில் ரத்தப் பாதங்கள் பதிந்திருந்தன.

பாபுவுக்கு உடலெல்லாம் அட்ரினலின் பாய, தலையிலிருந்து கால்வரை வியர்த்துவிட, எந்த திசை, எதற்கு என்பதெல்லாம், யோசிக்காமல் ஓடினான்.

சிக்பேட்டை பெங்களூரின் மிகப் பழைய பகுதிகளில் ஒன்று. சந்துகள் இருபுறமும் கடைகளால் ஆக்கிரமிக்கப்பட்டு, ஏறக்குறைய ஒற்றையடிப் பாதை அளவுக்குக் குறுகி, சைக்கிளும், ஸ்கூட்டரும், கைவண்டியும், மாட்டு வண்டியும், டயர் வண்டியும் இடையே லாரியுமாக மக்கள் அதன் ஊடே நடப்பதே கஷ்டம். பாபுவுக்கு ஓட வேண்டியிருந்தது. ஒரு சந்து திரும்பியதும் எதிர்த் தரப்பிலிருந்து இரண்டு போலீஸ்காரர்கள் வருவதைக் கவனித்துத் திரும்பி பின்வாங்குகையில், தர்மராஜன் "நில்லு! சுட்டுருவேன்!" என்று பக்கத்திலிருந்து கத்துவது தெரிந்து, ஒரு கணம் நின்று ஒரு வீட்டிற்குள் நுழைந்தான்.

அந்த வீட்டில் இரண்டு பெண்கள் — ஹோம் வொர்க் பண்ணிக் கொண்டிருக்க, முகத்திரை அணிந்த பெண்மணி ஆட்டா பிசைந்து கொண்டிருக்க, பாபு ஓடி வந்து ஒரு பெண்ணைப் பலவந்தமாக இழுத்துப் பிடித்துக் கொண்டு "சத்தம் போடாதே! கொன்னுடுவேன்" என்று அதன் இரண்டு கைகளையும் பின் பக்கம் மடக்கி மூலைக்கு அழைத்துச் செல்ல, குடும்பத்தின் மற்றவர்கள் அனைவரும் கூக்குரலிட, தர்மராஜன் வந்து சேர்ந்தார்.

பாபு ஓர் ஓரத்தில் ஒரு பெண்ணைச் சிறைப்படுத்தி வைத்திருப்பதையும் துரிதமாகக் கணித்தார். "கிட்ட வராதே! பொண்ணு உயிருக்கு ஆபத்து!" என்றான் பாபு.

தர்மராஜன் தயங்கினார்.

"பாபு! இதைப் பாரு. இதில் பிரயோஜனமே இல்லை. நீ நல்லா மாட்டிக்கிட்டே. இந்தப் பொண்ணை ஏதாவது செஞ்சே, உன்னை அப்படியே சுட்டுப் பொசுக்கிடுவேன். என்னை யாரும் குறை சொல்ல மாட்டாங்க. மூளை இருக்கு பாரு, அப்படியே வெடிச்சுச் செக்கச் செவேல்னு பாளம் பாளமா வெளிய வர்றாப்பல சுட்டுடுவேன். வுட்டுடு அந்தப் பொண்ணை! நாங்க உன்னை அடிக்க மாட்டோம், திட்ட மாட்டோம். சொல்றதைக் கேக்கறியாப்பா!"

பாபு, "கிட்ட வராதே, கிட்ட வராதே" என்று திரும்பத் திரும்பச் சொன்னாலும், தர்மராஜன் கிட்டத்தான் வந்தார்.

"மேரிபச்சி மேரிபச்சி" என்று இந்திக்காரி சிக்பேட்டை முழுவதும் கேட்குமாறு அலற, "சுப்" என்று ஒரு கான்ஸ்டபிள் அதட்டினார்.

தர்மராஜன் "பாபு, சொல்றதைக் கேப்பேயில்லே? கேப்பேயில்லே?" என்று அருகே அருகே சென்று அவன் கையைப் பிடித்தார்.

சுஜாதா

பாபுவின் கன்னத்தில்பேயறை ஒன்று அறைந்தார். "...ஸி! குழந்தையைக் கொல்லுவியாடா நீ?" என்று அவன் தாடையை வலுக்கட்டாயமாகச் சுருக்கிக் கான்ஸ்டபிளிடம் கொடுத்தார். அவர் அறையே எதிரொலிக்கும்படி அடித்தார். பாபு "அய்யா, அய்யா, அடிக்காதீங்க!" என்றான்.

விலங்கு மாட்டி வீட்டுக்கு வெளியே கொண்டு வருவதற்குள் பாபுவின் தாய் லட்சுமி வாசலுக்கு ஓடிவந்து, "அய்யோ, இந்த அநியாயத்தைக் கேக்கறவங்க இல்லையா! என் மவனை அநியாயமா அழைச்சுட்டுப் போறாங்களே! அவனுக்கு ஒண்ணுமே தெரியாதே! எல்லாம் அந்தப் பால்குண்டுதானே! அய்யா, அய்யா! என்ன செஞ்சான் என் செல்லம்? என் செல்லம் கைல விலங்கா? என்னது, என்னது?" என்று மிகையாக அலறினாள்.

"லட்சுமி! உம் மவன் என்ன செஞ்சான் தெரியுமா? கபன்பார்க்கில் ஒரு பொம்பளையை வண்டியில அழைச்சுக்கிட்டுப் போய்க் கெடுத்திருக்கான், தெரியுமில்லை?"

"அய்யோ, அதெல்லாம் செய்ய மாட்டானே, எம்மவன்! பாபு! பாபு! இதெல்லாம் செஞ்சியாடா, நீ?"

பாபு, "ஆமா! உன் வவுத்தில பொறந்தவன் வேறே என்ன செய்வான்?" என்றான்.

"பேச்சப் பார்த்தீங்களா இன்ஸ்பெக்டரய்யா? இவனுக்காக ராப்பகலா உழைச்சு..."

"எங்கே பகல்லே உழைச்சே லட்சுமி?" என்று காவல்காரன் சிரிக்க, பாபுவை ஜீப் வண்டியில் ஏற்றும்போது சின்னப் பயல்கள் 'ஹோ' என்று ஆரவாரம் செய்தார்கள்.

"பாபு, பால்குண்டு எங்கே காமிக்கிறியா?"

பால்குண்டு அப்போது அலங்கார் சலூனில் கழுத்து வரை போர்த்தி ஷேவிங் பண்ணிக் கொண்டிருந்தான். செய்தித் தாள் துண்டில் கொஞ்சம் சோப்பும் கொஞ்சம் ரோமமும் கலந்து வழுவலாக அருகில் இருக்க, கண்ணாடியையே உற்றுப் பார்த்துக் கொண்டு பையனிடம் "பாபு வந்தானாடா?" என்று கேட்டுக் கொண்டிருந்த போது,

"இதோ பாபு" என்று பையன் சொல்ல, கண்ணாடி வழியாகப் பார்த்தான்.

"என்ன பாபு பேஸ்த்து அடிச்சிருக்கே?"

"குரு! குரு! போலீஸ்."

"போலீஸ்ல என்ன செஞ்சாங்க?"

தர்மராஜனை அப்போதுதான் பார்க்க, உடனே அரை சவர நிலையில் எழுந்திருக்க முயற்சி செய்ய, தர்மராஜன் தம் பிரம்பை அவன் கழுத்தில் பதித்து, "நகராத, ராஸ்கல்! மாட்டிக்கிட்டாச்சு, நகராதே! கண்ணாடியெல்லாம் சிதறிடும்" என்றார்

பால்குண்டு அவரை முறைத்துப் பார்த்து, "ஷேவிங் முடிச்சுட்டு வர்றேன்" என்றான்.

"ஜெயிலுக்குப் போறதுக்கு சேவிங்கா உனக்கு? ஏண்டா, டேய்!"

"எனக்கு வக்கிலைப் பார்க்கணும்."

"வக்கிலு, வாத்தியார், டாக்டர், யாரை வேணாப் பார்க்கலாம், வாடா சோமாரி."

"நம்மகிட்டே வச்சுக்காதீங்க" என்றான் பால்குண்டு. இதற்குள் அலங்கார் ஹேர் டிரஸ்ஸிங் வாசலில் ஜனவெள்ளம் பெருகிவிட, "ராத்திரி வந்து காசு தர்றேண்டா" என்று அபத்தமாகச் சொல்லிவிட்டுச் சீப்பு எடுத்துத் தலைவாரப் பிரயத்தனம் செய்த பால்குண்டுவை, "அவ்வளவு இமிராடா உனக்கு? நான் வாரி விடட்டுமா?" என்று துப்பாக்கியால் அவன் தலையை நிரடினார்.

"இதுக்கெல்லாம் நீங்க பின்னால துன்பப்படப் போறீங்க, இன்ஸ்பெக்டர்! நான் யாருன்னு தெரியாது உங்களுக்கு!" என்றான்.

"தெரிஞ்சுக்கறோம், போட்டோ எடுக்கறோம் வா!"

"கேஞ்சா, நஞ்சப்பாகிட்ட போய்த் தகவல் சொல்லிரு. என்ன! இங்கே நடந்ததை எல்லாம் சொல்லிரு; என்னா! பாத்துக்கலாம்."

சோமசேகர் காரை விட்டு இறங்கிக் கதவைத் திறக்க, பின் பக்க சீட்டிலிருந்து டாக்டர் ராம்பிரகாஷும், அம்ருதாவும் இறங்கினார்கள். "சோமசேகர், இஸ் இட் நெஸஸ்ஸரி" என்று ராம்பிரகாஷ் கேட்க, அதற்குப் பதில் சொல்லாமல், "வாங்கம்மா" என்று பரிவாக அழைத்தார். காரிடாரில் தட்டிக்கருகில் பாபுவும் பால்குண்டுவும் கைவிலங்குடன் நின்று கொண்டிருக்க, பால்



குண்டு கையைத் துண்டு போட்டு மறைத்திருந்தான்.

''இவங்கதான்'' என்றார் தர்மராஜன். ''பாருங்கம்மா.''

அம்ருதா தரையைப் பார்த்துக் கொண்டு நடந்தவள், மெதுவாகப் பார்வையை நிமிர்த்தினாள். இருவரையும் பார்த்தாள். அவர்கள் பார்வையில் வெறுப்பும் பயமும் இருந்தது. ''உள்ளே போகலாம்'' என்றாள்.

ராம்பிரகாஷ் அவர்கள் இருவரையும் நிதானமாகப் பார்த்தார். இந்த மாதிரி இளைஞர்கள் எத்தனை பேரைப் பெங்களூரில் பார்த்திருக்கிறோம். எல்லோரையும் போலத் தலைமயிர், எல்லோரையும் போல் படிப்படியாக முடிவெட்டு, எல்லோரையும் போல் உதட்டில் சிகரெட் கறுப்பு, சதிப் பார்வை... எல்லோரையும் போல்...

ஆனால், ஆனால், இவர்கள்...

என் மனைவியைக் கற்பழித்தவர்கள்!

சோமசேகரின் அறைக்குள் சென்று அவர் மேசைக்கு எதிர் நாற்காலியில் உட்கார்ந்து கொள்ள, ''என்னம்மா, இவங்கதானா? முகம் ஞாபகம் இருக்குதா?'' என்றார் அவர்.

''இல்லை!''

''இருட்டில எப்படி ஞாபகம் வெச்சுக்க முடியும் சொல்லுங்க?''

''ஆனா இவங்கதான் ஸார், அட்லீஸ்ட், இவங்கள்ள ஒருத்தன்!''

''எப்படிச் சொல்ல முடியும்?''

''அந்த ஸ்மெல், அந்த வியர்வை நாற்றம், அதை என்னால மறக்கவே முடியாது!''

சோமசேகர் ராம்பிரகாஷைப் பார்த்தார்: ''தட்ஸ் நாட் எவிடென்ஸ். ஃபீரமோன் மூலமா ஓர் ஆளை... பாருங்கம்மா, இவங்க ரெண்டு பேர்தான்னு உங்களால கோர்ட்டில சாட்சி சொல்ல முடியுமா? உங்களை க்ராஸ் எக்ஸாமின் பண்ணுவாங்க; அதை அவாய்ட் பண்ணப் பார்க்கிறோம். ஆனா...''

''இவங்கதான்! பேசச் சொல்லுங்க ப்ளீஸ்!''

''உள்ளே கூப்பிடுறா அந்தத் தா......ங்களை.''

இருவரும் உள்ளே கொண்டு வரப்பட்டனர்.

''பேர் சொல்லுடா சோமாரி!''

''பால்குண்டுங்க.''

''பால்குண்டு, இன்னாடா பேர் அது?''

''பேரு! அதான்!''

''வேற ஏதும் பேர் கெடையாதா?''

'''கடி'ன்னு கூட ஒரு பேர் உண்டுங்க'' என்று சிரித்தான்.

''சிரிக்கிறியாடா?'' என்று சொட்டேல் என்று செவிட்டில் அறைந்தார் தர்மராஜன்.

''தர்மு! கொஞ்சம் இருங்க — நஞ்சப்பா, அவரைத் தெரியுங்க எனக்கு'' என்றான் பால்குண்டு.

''எந்தக் கஞ்சப்பாவும் உன்னைக் காப்பாத்தப் போறதில்லை. உம்பேரு என்னடா?''

''பாபு.''

அம்ருதா மெல்ல ''இதே மாதிரிதான் குரல் இருந்தது'' என்றாள்.

''எப்படிச் சொல்றே அம்ரு?''

''குரல்களை மறக்கவே முடியாது என்னால. உங்க குரல், வர்ஷா குரல், செத்துப்போன எங்க அம்மா குரல், தெருவில் கீரை விற்கிறவன் குரல், டிஸிபி குரல், இவங்க குரல்...''

''பாபு, இதைப் பாரு, இந்தம்மாவைத்தான் அன்னைக்கு ஆட்டோவில் கபன் பார்க்கண்டை இட்டாந்திங்க?''

''முகம் சரியா ஞாபகம் இல்லைங்க.''

''அப்ப ஒரு அம்மாவை இட்டாந்திங்க.''

''சாவுகிராக்கி, மடக்கறாங்கடா! ஸார், எங்களுக்கு ஒண்ணும் தெரியாதுன்னு சொல்லுரா பாபு, தெரியாது!''

''அடிக்கிறாங்களே, குரு!''

''குரு... குரு... இப்படித்தான் கூப்பிட்டுக்கிட்டாங்க.''

''பாபு நீ மரியாதையா குற்றத்தை ஒப்புத்துக்கிட்டா தண்டனையும் கொறைவு!''

''பாபு ஏதும் பேசாதே. நஞ்சப்பா, அவருக்குத் தகவல் சொல்லியிருக்கேன். அவரு ஆளை அனுப்பறாரு. நம்மளை யாரும் டச் பண்ண முடியாது. பாருங்க இன்ஸ்பெக்டர், இந்தம்மாதான் எங்களை வரவழைச்சாங்க, தெரியுமில்லை? உள்ளுக்குள்ளே பூந்திங்கன்னா விஷயம் ரொம்ப ஆபாசமாயிடும்! தெரியுமில்லை?'' என்றான் பால்குண்டு.

அப்போது, ''என்ன இங்கே ரகளை?'' என்று கேட்டபடி வக்கீல் விஜிராவ் வந்தார்.

(தொடரும்)



ஆனந்த் 70MM A/c

தினசரி 4 காட்சிகள்

ஈகா A/c

ஸ்ரீ கிருஷ்ணா

3 காட்சிகள்

உதயம் A/c

ஸ்ரீ பிருந்தா A/c

பகல் காட்சி

மற்றும் தமிழகமெங்கும்





# உன்னால் முடியும் தம்பி



K.பாலசந்தர்

இளையராஜா

ELEGANT

# சீனு ஒருமை

"நேத்து சீனு வந்திருந்தான்." அடையாளமே-தெரியலை. பல்லெல்லாம் விழுந்து, கறுத்துப் போய் நாயாப் போயிட்டான்" — லக்ஷ்மி சொல்லும் பொழுதே, நாயை விட வேறு ஏதாவது உதாரணம் சொல்லி இருக்கலாமோ என்று தோன்றியது ராமசுப்புவுக்கு. நாயென்றால் எவ்வளவு கேவலம்? ஏன் பாமரேனியன் இல்லையா, புஸு புஸுவென்று?

"ஏண்டி நாய், பேய் என்கிறே? ஒரு காலத்துல மன்னி, மன்னின்னு உயிரை விடுவானே? அவ்வளவுதானா?"

"உங்களுக்கு அவனை என்னிக்குமே கரிக்கிறதுன்னாத்தான் பிடிக்குமே? என்னிக்கு வழக்கம் மாறி இருக்கு? ஏதுடா இவ்வளவு நாள் கழிச்சு வந்து இருக்கானே, விசாரிப்போம்னு தோணாம, ஏன்தான் கோணலாகவே புத்தி போறதோ?"

"சரி, சரி, விஷயத்தைச் சொல்லு, ஏன் இப்படி நாயாப் போயிட்டானாம்?"

"சுலோசனா இப்ப அவன்கூட இருக்கிறதில்லையாம். தனியாப் போயிட்டாளாம். டைவோர்ஸ்னும் இல்லாம, சேர்ந்தும் இல்லாம, என்னதான் கஷ்டமோ, பாவம், முகம் பார்க்க முடியலை. எப்படி இருந்தவன்? எப்போதுமே நல்லவர்களுக்குத்தான் சோதனை மேல் சோதனை வரும். இவன்கிட்டே இப்ப சாமான்னு கூட ஒன்றையும் விட்டு வைக்காமல் எடுத்துண்டு போயிட்டாளாம். கட்டின புருஷன்னு ஒரு பயம் இல்லை இந்தப் பெண்களுக்கு" — கோபமாக இதுவரை மனைவியின் குரலைக் கேட்டறியாதவருக்கு அதிசயமாக இருந்தது. இவளுக்கு இப்பொழுது பயம் விட்டுப்போய் விட்டதோ?

"இப்ப அதுக்கு என்ன? ரெண்டு கையும் கொட்டினாத்தான் சத்தம் வரும். சும்மா அவனை ஏன் சொல்றே?" —சீண்டி விட்டார்.

"சொல்வேளே, எப்பவுமே உங்களுக்குச் சீனுன்னா தொக்குதானே? எப்ப என்ன சொல்லலாம்னு காத்துண்டு இருப்பேளே. கஷ்டம்னா ஒரு சமயா சமயத்துல நாம ஆறுதலா ரெண்டு வார்த்தை சொன்னாத்தான் மனுஷத்தனம். மேலே மேலே ஒருத்தனைக் காயப்படுத்தறதுல உங்களுக்கெல்லாம் என்னதான் கிடைக்கிறதோ? தப்பு இவன் பேர்லேயும் இருக்கலாம். ஆனா நம்மை நம்ம மனுஷான்னு மதிச்சு வந்தவனுக்கு ஆறுதலா ரெண்டு வார்த்தை சொல்லுங்கோ. இதுல காசு, பணம் செலவழியப் போறதில்லை. நாளைக்கு வர்றேன்னு இருக்கான். உங்களைப் பார்க்கலையேன்னு வருத்தப்பட்டுண்டு போனான்." மனைவிக்குச் சீனுவின் மேல் உள்ள பாசம் தெரிந்தவர், இனிமேல் வாய் திறந்தால் சும்மா விட மாட்டாள் என்று வாயை மூடிக் கொண்டார்.

மேலுக்கு அவளிடம் என்னமோ விளையாட்டுக்குச் சீண்டினாற்போல் பேசினாலும், மனசில் திக்கென்றது சீனுவின் செய்தி கேட்ட பிறகு. இந்தச் சீனு... அவன் அப்பா அம்மா வெளியூரில் இருந்ததால் இவர்களோடு தங்கி உத்தியோகத்துக்குப் போய்க் கொண்டிருந்தான். கூடப் பிறக்கா விட்டாலும், கூடப் பிறந்த தம்பிகூட இவ்வளவு பாசம் வைக்க மாட்டான். அவ்வளவு ஒட்டுதலாகப் பழகினான். கொஞ்சநஞ்சமாக உதவி பண்ணவில்லையே இந்தக் குடும்பத்திற்கு? உறவு கூடப் பணம் இருந்தால் ஒட்டிக் கொள்கிறேன் என்று இருக்கும் இந்தக் காலத்தில், ரத்தபாசமோ, எந்த வகை உறவோ இல்லாமல் வெறும் சினேகிதமே அதைவிட உறுதியான உறவாகத்தான் இருந்தது.

என்னதான் நடந்து இருக்கும்? முன்பின் தெரியாமல், வெறுமனே பழக்கம் காரணமாக ஆரம்பித்த உறவுக்கே அவ்வளவு முக்கியத்துவம் கொடுத்து, பழகியவன் சொந்த மனைவியிடம் ஏன் ஒத்துப் போக, முடியவில்லை? மனம் மிகவும் சங்கடப்பட்டது.

"எனக்கு இன்னிக்குச் சாப்பாடு வேண்டாம். வயிறு சரியில்லை" என்றார். லக்ஷ்மி புரிந்து கொண்டாள், காரணம் என்ன என்று. முப்பது வருட அனுபவம் ஆயிற்றே! நாளைக்குச் சீனு வருவானே, இவரைப் பற்றியும் கொஞ்சம் கம்ப்ளெண்ட் பண்ணணும். அவனுக்குத்தான் அடங்குவார். வரவர எதை எடுத்தாலும் கோபம். சின்ன வயசில் எல்லாம் நடந்தது. வயசான பிறகு அடங்க வேண்டாமோ ஹ்ம்ம்...! இப்பவும் அந்தப் பழைய சீனுவாகவேதான் நினைக்க முடிகிறது.

"மன்னி, நீங்கதான் என்னமோ பயந்து, பயந்து சாகறீங்க. இதான் என்னால் முடிஞ்சது. இஷ்டமிருந்தால் சாப்பிடுங்க, இல்லைன்னால் வெளியே சாப்பிடுங்கன்னு சொல்லாமல், ஒரேயடியா குனியறீங்க. என்ன அப்படி கோபம்? ஒருநாள் கொஞ்சம் சமையல் நன்னா வரலைன்னா அட்ஜஸ்ட் பண்ணிக்கிறது? இதை மாதிரி நீங்க பணிஞ்சு போறதினாலேதான் அவர் ஓடஓட விரட்டறார். எவ்வளவு நாட்கள் வெளியே சாப்பிட முடியும்? தன்னால எல்லாம் பணிஞ்சு போய் வீட்டுக்கு வந்து விடுவார் பாருங்க

மதுமிதா

ளேன். நீங்க ஒரு நாள் நான் சொல்ற மாதிரி தான் செய்யுங்களேன்'' — அவன் கரடியாய்க் கத்துவதுதான் மிச்சம். அவனும் எப்போது இவர் கோபித்துக் கொண்டாலும் சொல்வதை மறக்க மாட்டான். லக்ஷ்மியும் இவன் சொல்வதை எல்லாம் சிரிப்போடு, கேட்டுக் கொண்டு பிறகு அவரிடம் பயந்து பயந்துதான் பேசுவாள். பயந்து பயந்துதான் எல்லாக் காரியமும் செய்வாள்.

''அட, நான் ஒரு மனுஷன் சொல்றதையே கேட்காமல், அப்படி என்ன பயம்? என்ன பண்ணிடுவார், கேக்கறேன். ம்...? பயப்படறவனுக்கும் ஓர் அளவு உண்டு. என்னமோ அவர்தான் அது சரியில்லை இது சரியில்லைன்னு தட்டைத் தூக்கி எறியறார்னாக்க, நீங்க அதுக்குமேலே ஒண்ணுமே நடக்காதது மாதிரி, தட்டை எடுத்துட்டு வேறே புதுசாப் பண்ணிப் போடறீங்க. அப்படி என்ன ஒரு பயம்? இவ்வளவு வேலை செஞ்சதுக்கு ஒரு பாராட்டு இல்லைன்னாலும், அட்லீஸ்ட் தட்டைத் தூக்கி அடிக்காமலாவது இருக்கலாமில்லையா?''

இவன் தன் தொண்டைத் தண்ணீர் வற்றக் கத்துவதுதான் மிச்சம். அவள் என்னமோ தன் இஷ்டத்துக்குத்தான் நடப்பாள். அதில் ஓர் அசம்பாவம்இருக்கும். இதெல்லாம்உனக்குப் புரியாது. நீ சின்னப் பையன் என்பது மாதிரி. அதுதான் அவனுக்கு இன்னும்எரிச்ச





லாக இருக்கும். இந்தக் கத்தல் எல்லாமும் இவர் வீட்டில் இல்லாத பொழுதுதான். அவர் தட்டை வீசி எறிஞ்சு விட்டை விட்டு வெளியே போன பிறகுதான்; அவருக்கு எதிரில் வாய் திறக்க மாட்டான்.

இது எப்பொழுதும் தொடர்ந்து கொண்டேதான் இருந்தது. அவர் கத்துவதும், இவன் பின்னால் முனகுவதும், இவள் ரெண்டு பேரையும் சமாளித்துக் கொண்டு போவதும்தான் வாழ்க்கையாக இருந்தது.

"மன்னி, இன்னிக்கு அண்ணாவுக்கு ஏது இவ்வளவு பணம்? எங்கிருந்து கிடைத்தது? கடன் வாங்கினாரா? நான் ஒருத்தன் இருப்பதே கண்ணுக்குத் தெரியாதே உங்களுக்கு எல்லாம்? ஏன், என்னிடம் கேக்கறது...! என்னிடம் இருந்தால் தர்றேன். இல்லைன்னால் என் நண்பர்கள் கிட்டேயிருந்து குறைஞ்ச வட்டிக்கு வாங்கித் தருவேனா இல்லையா? இவன்கிட்டே ரெண்டு வட்டி கொடுத்து வாங்கி, அப்படியாவது ஊருக்கு அனுப்பணுமா? என்ன இப்ப அப்படி அவசரம்? ரெண்டு நாள் பொறுத்துக்க முடியாதா?" என்று பொரிவான் ஒருநாள்.

கோபத்தில் கத்திவிட்டுப் போவானே தவிர, அன்றே தன் நண்பனிடம் வாங்கி அதிக வட்டி கொடுத்து அண்ணா வாங்கிய கடனை அடைத்துவிட்டு, "இனிமேல் பணம் வேணும்னா என்னிடம் சொல்லுங்களேன்" என்பான் அண்ணாவிடம்.

அவரோ, "இவர் பெரிய தொரை, இவர் கிட்ட பணம் கேக்கணுமாம். யாரைக் கேட்டுண்டு நான் வாங்கின கடனை அடைச்சான்? எனக்கு அடைக்கத் தெரியாமலா நான் கடன் வாங்கினேன்? இனிமேல் சொல்லி வை, இந்த மாதிரி வேலை எல்லாம் பண்ண வேண்டாம்னு?" மனைவியிடம் தனியாக உறுமுவார்.

சொல்வாரே தவிர, அவர் கடன் வாங்குவதும் நிற்காது. இவன் கத்திக் கொண்டே கடனை அடைப்பதும் நிற்காது. ஏதாவது ஒரு விஷயம் மாற்றி ஒரு விஷயம் குறை சொல்லிக் கொண்டே இருப்பான். அவனுக்குக் குறை சொல்வது மாதிரி தோன்றினாலும், நிஜம் என்னவோ அவன் சொல்லுவதில்தான் இருக்கும். அவர் சாப்பிட உட்கார்ந்தாலும், அங்கேயும் இவனுக்குப் பரிந்து பேச விஷயம் கிடைத்துவிடும்.

"சாப்பிட்டால் தட்டு எடுத்துப் போடற வழக்கம் இல்லைன்னா, கீழ் சிந்தாம, ஓர் ஒழுங்காச் சாப்பிட மாட்டார்? அங்கே தயிரைக் கொட்டி, குழம்பில் கறிவேப்பிலையைக் கீழே எடுத்து வைச்சு, தரையெல்லாம் ஒரே கறை. சேச்சே, தட்டை எடுத்துச் சுத்தம் பண்றவங்களும் மனுஷாதானே? நம்மைச் சேர்ந்தவங்க கஷ்டப்படக் கூடாதுன்னு ஏன் இவருக்குத் தோண மாட்டேங்கறது? என்ன ஓர் அலட்சியம்? நான் இப்படித்தான் இருப்பேன், நீ என்ன வேணா செய்துக்கோங்கிற மாதிரி! மன்னி, எப்படிப் பொறுமையா இதையெல்லாம் சகிச்சுக்கி-



"மீனாட்சி, காப்பி ரொம்ப நன்னா இருக்குடி, பேஷ்!"

"ஐய்யோ! காப்பி மாறிப் போச்சா. வேலைக்காரி முனியம்மாளை நான் எப்படிச் சமாதானப்படுத்துவேன்...?"

— ஓய். கே. சங்கர்.

றீங்க?"

இவன் சொல்லும்பொழுது ரோஷமாக இருக்கும், இவன் யார் இதிலெல்லாம் குறுக்கிட என்று. ஆனால் கல்யாணமான புதிதில் இந்த மாதிரி வேலை செய்யும் பொழுது ஒருவிதமான அருவருப்பு ஏற்பட்டதென்னவோ நிஜமே. ஒரு வேளை பழக்கம் காரணமாக அருவருப்பாகத் தோன்றிய விஷயம், சாதாரணமாகி விட்டதோ?

"சும்மா ஏதாவது ஒண்ணுமில்லாத விஷயத்தைப் பெரிசுபடுத்தாதே. போ. வேறே வேலையைப் பாரு" என்று பேச்சை மாற்றி விடுவாள்.

ஆனால் அவன் வேலை மாற்றம் ஆகிப் போன பிறகு அவன் இல்லாத குறை இருவருக்குமே மிகவும் தெரிந்தது. அவரவர் குடும்பச் சூழலில் ஒருவருக்கொருவர் பார்த்துக் கொள்வது குறைந்து போய், பிறகு ஒன்றுமே இல்லாமல் போனது. ரொம்ப வருஷங்களுக்குப் பிறகு இன்றுதான் வர முடிந்தது அவனால்.

"மன்னி..." குரலில், அன்று இருந்த அதே சுறுசுறுப்புத்தான். ஆனால் எவ்வளவு மாற்றம்?

தலை நரைத்துப் போய், முன் பற்கள் இரண்டு விழுந்து, கறுத்துப் போய் மிகவும் இளைத்துத்தான் போய்விட்டான். ஆரம்ப நாட்களில் இருந்த அழகு எங்கேயோ போய் விட்டது. மன அமைதி இல்லாவிட்டால் ஆரோக்கியமும் குறைகிறது என்பது இவனைப் பார்த்தாலே தெரிகிறதே. எதில் இவனுக்குக் குறை. அழகில்லாமல் இருந்தானா, புத்தியில்லையா, அனுசரணை இல்லாதவனா? உறவென்று இல்லாத பொழுதே, தங்களிடம் இவ்வளவு ஒட்டுதலாகப் பழகியவன் எப்படித் தன்னுடைய மனைவிக்கு மாத்திரம் விரோதியாகிப் போனான்? — கேட்டார் ராமசுப்பு.

"இதோ பாருங்க அண்ணா, நீங்க என்னை உங்க குழந்தையா, தம்பியா நினைத்துப் பார்க்கிறீர்கள். ஆனால் நான் எல்லோருக்குமே நல்லவனா இருக்க வேண்டிய அவசியம் இல்லையே. ஒருத்தருக்கு அமுதா இருக்கிறது இன்னொருத்தருக்கு நஞ்சா இருக்கலாம். என்னமோ அவளுக்கு என்னைப் பிடிக்கலை. தினம் சண்டைதான். ஒண்ணுமில்லாத விஷயத்தை எல்லாம் பெரிசுபடுத்து

சென்னை மைலாப்பூரில், கடற்கரைக்கு மிக அருகில் வசதியான அடுக்குமாடி ப்ளாட்டுகள் (Flats) பல கட்டப்பட உள்ளன. இந்த ப்ளாட்டுகள் (Flats) ஒன்று, இரண்டு அல்லது மூன்று படுக்கை அறைகளைக் கொண்டவையாக இருக்கும். இந்த ப்ளாட்டுகளின் அருகிலேயே சிறந்த கல்விக் கூடங்களும் உள்ளன. இவை 1990 ஆண்டு மத்தியில் தயாராகும் என எதிர்பார்க்கப்படுகிறது.

உங்களுக்கு உதவும் வகையில், வங்கியிலிருந்து 14% வட்டியில் கடன் வசதியும் பெற்றுத் தரப்படும். (இந்த வட்டிக்கு வருமானவரி விலக்கு உண்டு.)

மேற்கொண்டு விவரங்களுக்கு, தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**ஸ்ரீராம் கேபிடல் டிரஸ்ட்,**
**101, சாந்தோம் நெடுஞ்சாலை,**
**சென்னை - 600 028.**
**போன் : 71004.**

## சமய, சமூக சேவை செய்ய விருப்பமுள்ளோருக்கு ஓர் வேண்டுகோள்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தின் சார்பிலும் ஜனகல்யாண், பொன்விழா ட்ரஸ்ட் சார்பில் பல கோயில்கள் திருப்பணி செய்யப்பட்டும், நித்ய பூஜை நடைபெறுவதற்கும், கோ பூஜை செய்வதற்கும் உதவிகள் அளிக்கப்பட்டு வருகின்றன. இதற்கென பொது மக்கள் மூலமாக இதுவரை ஒரு லக்ஷ ரூபாய் கிடைத்துள்ளது. இந்தத் தொகை கோவில்களுக்கு அளிக்கப்பட்டு செலவும் ஆகிக் கொண்டிருக்கிறது. தொடர்ந்து இந்தப் பணிகள் நடைபெற வேண்டிய சூழ்நிலை உள் ளது. ஆகவே இந்தப் பணி தொடர்ந்து நடைபெற பொதுமக்களும், வியாபாரிகளும் தங்கள், தங்களாலான நிதி உதவிகளை கீழ்க்கண்ட விலாசத்திற்கு தொடர்ந்து அனுப்பவும். உதவி அளிப்பவர்களுக்கு ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் குங்குமப் பிரசாதமும், ரூ 100/- க்கு குறையாமல் அளிப்பவர்களுக்கு ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் வெள்ளிக் காசும் அனுப்பி வைக்கப்படும்.

இந்தத் தொகை அளிப்பவருக்கு வருமான வரி விலக்கு 80 (G)ன் கீழ் உண்டு.

"ஜனகல்யாண் ட்ரஸ்ட்"
ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்,
No. 1, சாலைத் தெரு,
காஞ்சீபுரம், தமிழ்நாடு.

வான். நான் பதினைந்து வருஷம் வாழ்ந்ததை நாலு வரியில் அடக்கிட முடியாது. சுருக்கமாச் சொல்லணும்னா நான் இப்பத்தான் நிம்மதியா இருக்கேன். இனிமேல் என்கிட்ட சண்டை போட யாரும் இல்லை பாருங்கோ!''

**பி**ன் ஏன் இந்த இளைப்பு? நிம்மதியாக இருப்பவன் சந்தோஷமாக, இன்னும் ஆரோக்கியமாக அல்லவா இருக்க வேண்டும்? தனக்குக் கிடைக்க வேண்டும் என்று எதிர்பார்த்தான். கிடைக்கவில்லை என்றதும் மனத்தின் ஏமாற்றம் அதிகரித்துவிட்டது. 'எதிர்பார்க்காதே எதுவும். எதிர்பார்த்து ஏமாறுவதைவிட ஆசைகளைச் சுருக்கிக் கொண்டு வாழ்வது சுலபம். ஆசைகள் அதிகரிக்க, ஏமாற்றமும் அதிகரிக்கும். கிடைக்காத ஒன்றுக்கு ஏங்குவதைவிட, கையில் சுலபமாகக் கிடைக்கக் கூடியதுடன் மனத்தைத் திருப்திப்படுத்திக் கொள்ளத் தெரிய வேண்டும்.' — மனத்தில் வேதாந்தம் தோன்றியது. நினைத்ததைச் சொன்னார்.

''நீங்க ஒண்ணு. இன்னிக்கு நீங்க என்னைவிட இரண்டு மடங்கு அதிகமா வாழ்ந்து அனுபவிச்சிட்டீங்க. நீங்க என்னிக்குக் கத்தினாலும் 'மன்னி' உங்களை எதிர்த்துப் பேசலை. உங்க குரலுக்கு அடங்கியே வாழ்ந்துட்டா.

''உங்களுக்குப் பணிஞ்சு போறதாகக் காண்பிச்சு, தன்னுடைய இடத்தை ஸ்திரப் படுத்திக் கொண்டு இருக்கா. இன்னிக்கு அவ இல்லாம நீங்க இல்லைன்னு ஆக்கியிருக்கா. இதெல்லாம் எதனால...? அன்பால் ஒருத்தரைப் பணிய வைக்க முடியற மாதிரி, வேறே எதாலும் முடியாதுன்னு காட்டி இருக்கா. குடும்பம் என்று ஒன்று தேவை என்று அவள் நினைச்சதால, நீங்க எவ்வளவு கோபப்பட்டாலும் தாங்கிண்டு இந்த உறவைக் காப்பாத்தி இருக்கா. அதே மாதிரி எங்க குடும்ப உறவைக் காப்பாத்தற நோக்கத்துல நான் தழைஞ்சு போனேன். ஆனால் என் மரியாதை கெட்டுப் போனதுதான் மிச்சம்... ''நீங்க சொல்றீங்க, ஆசையை அடக்கி வாழுன்னு. எல்லோருக்கும் சாதாரணமா குடும்பம், மனைவின்னு அமையறது. சரியா அமையலை என்பதற்காக அது ஏதோ படக்கூடாத ஆசை மாதிரி சொல்றீங்க. உங்களுக்குத் தெய்வம் மாதிரி மனைவி கிடைச்சும் நீங்க ஒண்ணுமில்லாத சின்ன விஷயத்தைப் பெரிசுபடுத்தி, ரகளை பண்ணறீங்க. இன்னிக்கு நான் படும் அவதியையே நீங்களும் படவேண்டி இருந்து இருக்கும், என் மனைவி மாதிரி அமைஞ்சு இருந்தால்.''

இவ்வளவு வருடங்கள் கழித்து, தன் அனுபவம் தந்த தைரியத்தில் சீனு அண்ணாவிடம் பேசினான். அவன் சொல்லச் சொல்ல ராமசுப்புவிற்குத் தான் தன் மனைவியை எவ்வளவு தூரம் வேதனைப்படுத்தி இருக்கிறோம் என்று குழிவிரக்கமாக இருந்தது.

## அருள்வாக்கு

**ப**ல துறைகளில் அனுபவஸ்தர்களான பெரியவர்கள் ரிடையராகி ஓய்வில் இருக்கிறீர்களல்லவா? நீங்கள் ஒன்று சேர்ந்து கணிதம், ஃபிஸிக்ஸ், கெமிஸ்ட்ரி, மற்ற புது ஸயன்ஸ்கள், என்ஜினியரிங், அக்கவுண்டன்ஸி இன்னும் இப்போது ஏற்பட்டிருக்கிற அநேக டெக்னலாஜிகல் ஸப்ஜெக்ட்கள், தொழில் துறை ஸப்ஜெக்ட்கள், (வீவிங், நெசவு போன்றவை கூடத்தான்) ஸங்கீத வாத்யங்கள் வாசிப்பதைக் கூடச் சேர்த்துக் கொள்ளலாம் — இந்த எல்லாவற்றிலும் பயிற்சி தருவதற்குப் பிரைவேட்டாக ட்யூட்டோரியல் காலேஜ் ஆரம்பியுங்கள். போதகர், போஷகர் இரண்டாகவும் இவற்றில் பணி செய்து இரட்டிப்புப் புண்ணியம் பெறுங்கள். கற்ற வித்தையை, உங்களுக்கு இத்தனை நாள் ஸம்பாத்யமும் இப்போது பென்ஷனும் வாங்கிக் கொடுக்கிற வித்தையை தினம் ஒரு மணி, இரண்டு மணி பிறருக்கு உபகாரமாகச் சொல்லித் தரக் கூடாதா? இதனால் ஒரு பெரிய ஸமூஹப் பிரச்னை தீரவும் உதவி செய்ததாகிறது.



வெறுமனே தொழிலுக்கான படிப்பாக மாத்திரமில்லாமல், இந்த ட்யூட்டோரியல் காலேஜ்களில் கொஞ்சம் ஸமயக் கல்வியும், அனுஷ்டான போதனையும் கூடக் கொடுக்கலாம். இப்போது லோகம் இருக்கிற இருப்பில், இதை கம்பல்ஸரியாகப் பண்ணினால், இம்மாதிரி காலேஜில் சேர வருகிறவர்களே குறைந்து போய் விடுவார்களோ என்று பயமாயிருக்கிறது! ஆனபடியால் இதை ''ஆப்ஷன''லாக வைக்கலாம். கட்டாயப் பாடமாக இல்லாததாலேயே, 'இதில் என்னதான் இருக்கு? பார்ப்போமே!' என்று பலருக்கு ஆர்வம் ஏற்பட்டு இஷ்டப் பாடமாக எடுத்துக் கொள்ளலாம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.



பரிசு பெறுகிறார் டாக்டர் சுந்தரம்.

# தமிழுக்கும் பாராட்டு தமிழிசைக்கும் பாராட்டு

இராஜா சர் முத்தையா செட்டியார் நினைவாக, சமீபத்தில் அரை லட்ச ரூபாய் பரிசு பெற்றுள்ளார் டாக்டர் (வீரண்ணன்) ப(ரமசிவம்) கா(மாட்சி) சுந்தரம். அவரைச் சந்தித்தோம்.

முத்தையா செட்டியார் பரிசு கிடைக்கப் போகிறது என்று ஐந்து நாட்களுக்கு முன்னால்தான் தெரிந்தது என்றார் டாக்டர் சுந்தரம்: ''திரு. ஆர். எம். ராமசாமி அவர்கள் போனில் சொன்னபோது, எனக்கு ஆச்சரியமாய் இருந்தது. 'எனக்குத்தானா, எனக்குத் தானா' என்று இரண்டு மூன்று முறை கேட்டேன்!

''என் தந்தை பெரிய புராணக் காலட்சேபம் செய்வார். 'பஜனை குரு'வாக இருந்து அவர் எனக்குச் சொல்லிக் கொடுத்ததால்தான் இசையில் நாட்டம் ஏற்பட்டது. அப்பா நன்றாகக் கஞ்சிரா வாசிப்பார்'' என்றார் சுந்தரம். அதனால் இவருக்கும் அந்த வாத்தியத்தில் பழக்கமுண்டு.

''நான் பிறந்த ஊர் கோம்பை. ஆனால் வளர்ந்ததெல்லாம் பசுமலையில். அங்குதான் ஐந்து ஆண்டுகள் தமிழ் படித்தேன். தொல்காப்பியத்தை நாள்தோறும் பாடம் கேட்பேன்...'' என்றார்.

இசை மேதை (காலஞ்சென்ற) டாக்டர் எஸ். ராமநாதன் அவர்களிடம் மூன்று வருடங்கள் பயின்று, பிறகு பழந்தமிழ் இலக்கியத்தில் இசை இயல் என்ற ஆராய்ச்சிக் கட்டுரை எழுதி, சென்னைப் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றார் சுந்தரம்.

மதுரை டி. என். சேஷகோபாலனின் குருவான சங்கரசிவம்தான் இசைத்துறையில் இவருக்கும் குரு. சிலப்பதிகாரம், பத்துப்பாட்டு, எட்டுத் தொகை முதலிய பழந் தமிழ் இலக்கியத்தில் உள்ள இசை நுணுக்கங்களைப் பற்றிய நூல் தவிர, 'ஆர்ட் ஆஃப் டிரம்மிங்,' 'த வாண்டரிங் வாய்ஸ்' ஆகிய நூல்களுக்கும் டாக்டர் சுந்தரம் ஆசிரியர். கிறிஸ்தவ மதம் தழுவிய குடும்பத்தைச் சேர்ந்தவர்; அதனால் பைபிள் கருத்துக்களை 'அருட்குறளாக'வும், இயேசுவின் புகழைத் 'திருப்புகழாக'வும் பாடியிருக்கிறார். ராஜாஜி, ம. பொ. சி.யிடமிருந்து பாராட்டுக்களும் பெற்றிருக்கிறார்.

''நான் செய்த பணிகளில் முக்கியமானது, பஞ்சமரபு முழுதுக்கும் விருத்தியுரை எழுதியமைதான். பஞ்சமரபு என்றால் என்ன என்று கேட்கிறீர்களா? பழந்தமிழ் இலக்கணம்!'' என்றார் டாக்டர் சுந்தரம்.

ராமலிங்கர் பணி மன்றத்தின் 'இசைக் கலைச் செல்வர்' பட்டமும் கிறிஸ்தவ இலக்கியச் சங்கத்தின் 'இலக்கியக் கலைச் செல்வர்' பட்டமும் ஏற்கெனவே இவருக்கு வழங்கப்பட்டுள்ளன.

முத்தையா செட்டியார் நினைவாக இவருக்குக் கொடுக்கப்பட்டுள்ள பரிசு, இவர் எழுதிய எந்தக் குறிப்பிட்ட நூலுக்கும் அல்ல. தமிழுக்கும், தமிழிசைக்கும் இவர் செய்துவரும் தொண்டுகளைக் கருதியே நடுவர் குழு இவரைத் தேர்ந்தெடுத்துப் பரிசு வழங்கியுள்ளது..

டாக்டர் சுந்தரம் காந்தியவாதி. கள்ளுக் கடை மறியல், தீண்டாமை ஒழிப்பு இவற்றில் ஈடுபட்டதோடு, மேடைகளில் தேசபக்திப் பாடல்களைப் பாடியவர். டாக்டர் ராமநாதன் போலவே பணிவு, அடக்கம்.

பரிசு வாங்க வந்த அன்று, முழுக்கைச் சட்டையையும் பளபளக்கும் சரிகைத் துண்டையும் போட்டுக் கொண்டு நின்றவர், தம்மை வந்து பார்ப்பவர்களிடம், ''இது நன்றாயிருக்கிறதா? என் உடை சரியாக இருக்கிறதா?'' என்று குழந்தை மாதிரி கேட்டுக் கொண்டிருந்தார்!

— சித்தார்த்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157: ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
அறுமாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

# 1. முன்னுரை

சிலர் பிறக்கும் போதே கையில் பேனாவைப் பிடித்துக் கொண்டு எழுத்தாளராய்ப் பிறக்கிறார்கள். சிலர் முயற்சி செய்து எழுத்தாளராகிறார்கள். இன்னும் சிலர் எழுத்தாளர் உலகிற்குள் கழுத்தைப் பிடித்துத் தள்ளப்படுகிறார்கள்.

மூன்றாவது கூறிய எழுத்தாளர் வர்க்கத்தைச் சேர்ந்தவன் நான். கொஞ்சங்கூட எதிர்பாராத விதத்தில் எழுத்தாளன் ஆனவன். இன்றைய தினம் நான் "வாடாமலர்" பிரசுராலயத்தின் தலைவனாக இருந்து தமிழ்நாட்டுக்கு இணையில்லாத் தொண்டு செய்து தமிழைக் கொன்று வருவதற்குப் பொறுப்பாளி யார் என்று கேட்டால், நிச்சயமாக நான் இல்லை. என் கைக்குள் அகப்படாத சந்தர்ப்பங்களின் மேலேயே அந்தப் பொறுப்பைச் சுமத்த வேண்டியவனாயிருக்கிறேன். இல்லையென்றால், முதன் முதலாக நான் பேனாவைக் கையில் பிடித்துக் கதை எழுதத் தொடங்கிய வேளையின் கூறு என்று சொல்ல வேண்டும்.

அப்படி எழுத்தாளர் உலகத்தில் என்னைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளக் காரணமாயிருந்த எனது முதல் கதை என்ன என்று தெரிய வேண்டாமா? அது என்னுடைய சொந்தக் கதையேதான். பர்மா நாட்டிலே, ஒரு அகாதமான காட்டு மலைப் பாதையிலே, மாலை நேரத்தின் மங்கிய வெளிச்சத்திலே அதை எழுதினேன். நான் அவ்விதம் எழுதிக் கொண்டிருந்த போது, பக்கத்து மரத்தடியிலேயிருந்து இரண்டு அழகிய, விசாலமான, கருநீல வண்டுகளையொத்த கண்கள், இமை கொட்டாமல் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தன. சற்று எழுதுவதை நிறுத்தி, நான் சுற்று முற்றும் பார்ப்பது போல் பார்த்து விட்டு, அந்த மரத்தடியையும் நோக்குவேன். அப்போது அந்தக் கண்கள் ஒரு குறுநகை புரிந்து விட்டு, வேறு பக்கம் நோக்கும். மறுபடி நான் எழுதத் தொடங்கியதும் அந்தக் கண்கள் மீண்டும் என்னை நோக்குகின்றன என்பதை என் உள்ளுணர்ச்சி மட்டுமல்ல — என் உடம்பின் உணர்ச்சியே — எனக்குத் தெரியப்படுத்தும்.

மலர்ந்து விழித்த அந்த நயனங்களிலே தான் என்ன மாய சக்தி இருந்ததோ, எனக்குத் தெரியாது. அந்த நயனங்களுக்குரியவளான நங்கையிடம் வேறு என்ன மந்திரம் இருந்ததோ, அதுவும் எனக்குத் தெரியாது. அவள் தன் கண்களின் தீட்சண்யமான பார்வையினால், என் உடைமை, உள்ளம், ஆவி எல்லாம் ஒருங்கே கவர்ந்து, என்னை அடிமை கொண்டு, சுய புத்தியுடன் இருந்த காலத்தில் நான் ஒரு நாளும் செய்யத் துணியாத காரியங்களையெல்லாம் செய்யப் பண்ணினாள் என்பது மட்டுந்தான் தெரியும்.

ஆம்; ஒருவிதக் கஷ்டமும் இன்றிச் சுய புத்தியுடனே தாய் நாட்டுக்குத் திரும்பி வருவதற்கு எனக்குச் சந்தர்ப்பம் இருக்கத் தான் இருந்தது. அதை நான் வேண்டுமென்று தவற விட்டதை நினைத்தால், விதியைத் தவிர வேறு காரணம் எதுவும் சொல்வதற்கு முடியாமலிருக்கிறது.

# 2. ரங்கூன்

1941-ம் வருஷம் டிசம்பர் 23வ உங்களுக்கு ஞாபகமிருக்கிறதா? அந்தத் தேதியை உங்களில் அநேகர் ஞாபகம் வைத்துக் கொள்வதற்குக் காரணம் இல்லாமலிருக்கலாம். ஆனால், நான் அந்தத் தேதியை ஒரு நாளும் மறக்க முடியாது. அன்றைய தினம் ரங்கூன் நகரில் இருக்க நேர்ந்த எவரும் அதைத் தங்கள் வாழ்நாள் உள்ள வரையில் மறக்க முடியாது.

அன்றுதான் முதன் முதலாக ரங்கூனில் ஜப்பான் விமானங்கள் குண்டு போட்டன.

குண்டு விழுந்த போது நான் என் காரியாலயத்துக்குள் வேலைபார்த்துக்கொண்டிருந்தேன். அபாயச் சங்கு ஊதிச் சற்று நேரத்துக்கெல்லாம், 'விர்' என்று விமானங்கள் பறக்கும் சத்தம், 'ஒய்' என்று குண்டுகள் விழும் சத்தம், 'படார்' என்று அவை வெடிக்கும் சத்தம், கட்டடங்கள் அதிரும் சத்தம், கண்ணாடிகள் உடையும் சத்தம் எல்லாம் கேட்டன. ஆனாலும், கட்டடத்துக்குள் பத்திரமாயிருந்த நாங்கள் அவற்றையெல்லாம் அவ்வளவு பிரமாதமாக எண்ணவில்லை.

அபாய நீக்கச் சங்கு ஒலித்து வெளியிலே வேடிக்கை பார்க்க வந்த பிறகுதான், விஷயம் எவ்வளவு பிரமாதமானது என்று தெரிந்தது. ரங்கூன் நகரில் பல இடங்களில் தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தது. ஜனங்கள் அங்குமிங்கும் பைத்தியம் பிடித்தவர்களைப் போல் ஓடிக் கொண்டிருந்தார்கள். விளைந்த சேதத்தை ஒன்றுக்குப் பத்தாக மிகைப்படுத்திச் சொன்னார்கள். எல்லாம் ஒரே அல்லோலகல்லோலமாயிருந்தது.

டல்ஹௌஸி தெருவில் வீடுகள் பற்றி எரிகிறதென்று கேள்விப்பட்டதும் எனக்கு வயிற்றிலேயே நெருப்புப் பிடித்து விட்டது போலிருந்தது. ஏனெனில் அந்தத் தெருவும் சுர்ஸான் தெருவும் சேரும் முனையில் ஒரு வீட்டு மச்சு அறையிலேதான் நான் வாசம் செய்தேன். என்னுடைய துணி மணிகள், கையிருப்புப் பணம் முதலிய சகல ஆஸ்திகளும் அந்த அறையிலேதான் இருந்தன. மானேஜரிடம் உத்தரவு பெற்றுக் கொண்டு, கம்பெனியின் காரையே எடுத்துக் கொண்டு வீட்டுக்குப் பறந்து விழுந்து கொண்டு சென்றேன். ஆனால், என்னுடைய வீடு எரியவில்லை. அதற்கு மாறாக நான் சற்றும் எதிர்பாராத ஒரு காட்சி அங்கே தென்பட்டது.

நான் குடியிருந்த வீட்டைச் சுற்றிலும் ஒரு சிறு காம்பவுண்டு உண்டு. அந்தக் காம்பவுண்டில் ஓரிடத்தில் இருபது முப்பது ஸோல்ஜர்கள் கும்பலாக நின்று கொண்டிருந்தார்கள். வாசல் கேட்டுக்கு அருகில் இரண்டு ஸோல்ஜர்கள் காவலுக்கு நின்றார்கள்.

மோட்டாரைச் சற்றுத் தூரத்தில் நிறுத்தி

விட்டு, வீட்டின் 'கேட்' அருகில் சென்றேன். காவல் ஸோல்ஜர்கள் வழி மறித்தார்கள். அது நான் குடியிருந்த வீடு என்றும், என் சாமான்களை எடுத்துக் கொள்ள வேண்டு மென்றும் சொன்னேன். நான் சொன்னதை அவர்கள் நம்பவில்லை. வீட்டுக்காரர்கள் வீட்டைக் காலி செய்து விட்டுப் போய் விட்டார்கள் என்றும் என்னை உள்ளே விட முடியாது என்றும் சொன்னார்கள். அப்புறம், அங்கே எதற்காக ஸோல்ஜர்கள் நிற்கிறார்கள் என்று விசாரித்தேன். மத்தியானம் அங்கே ஒரு குண்டு விழுந்தது என்றும், அது பூமிக்குள்ளே வளை தோண்டிக் கொண்டு போய்ப் புதைந்து கிடக்கிறதென்றும், அதை அபாயமில்லாமல் எடுத்து அப்புறப்படுத்துவதற்கு முயற்சி செய்கிறார்கள் என்றும் அறிந்தேன். அவர்களுடன் விவகாரம் செய்வதில் பயனில்லையென்று திரும்பிப் போனேன்.

திரும்பி எங்கே போனேன்? அது எனக்கே தெரியாது. கை போனபடி காரை விட்டுக் கொண்டு ரங்கூன் நகரமெல்லாம் சுற்றினேன். அன்று ரங்கூன் நகரம் அளித்த கோரக் காட்சியை என் வாழ்நாள் உள்ள அளவும் என்னால் மறக்க முடியாது.

வீதிகளிலெல்லாம் செத்த பிணங்கள்; சாகப் போகிற பிணங்கள். அங்கங்கே தீப் பற்றி எரியும் காட்சி. நெருப்பணைக்கும் இயந்திரங்கள் அங்குமிங்கும் பறந்து விழுந்து ஓடுதல், ஜனங்களின் புலம்பல். ஸ்திரீகளின் ஓலம், குழந்தைகளின் அலறல்.

இத்தகைய கோரக் காட்சிகளைப் பார்த்து விட்டு, சூரியாஸ்தமனம் ஆகி நன்றாய் இருட்டிய பிறகு, மறுபடியும் என்னுடைய வீட்டுக்கே திரும்பிச் சென்றேன். வாசற் புறத்தில் மோட்டாரை ஒரு மூலையில் நிறுத்தி விட்டு, காம்பவுண்டு சுவரின் பின் பக்கமாகச் சென்றேன். நான் குடியிருந்த வீட்டிலிருந்து என்னுடைய சொந்த சாமான்களை எடுத்து வருவதற்குத் திருடனைப் போல் சுவர் ஏறிக் குதித்து இருட்டில் பதுங்கிப் பதுங்கிச் சென்று வீட்டின் பின்புறத்தை அடைந்தேன். சத்தம் செய்யாமல் உள்ளே புகுந்து மாடிப்படி வழியாக மேலே ஏறினேன். சாதாரணமாக மாடி அறையை நான் பூட்டிக் கொண்டு போகும் வழக்கம் கிடையாது. அன்றைக்கும் கதவைப் பூட்டவில்லை. ''நல்லதாய்ப் போயிற்று'' என்று எண்ணிக் கொண்டு கதவைத் திறந்தேன்.

திறந்ததும் மாடி அறைக்குள்ளே நான் கண்ட காட்சி, விழித்துக் கொண்டிருக்கிறேனா, கனவு காண்கிறேனா என்ற சந்தேகத்தை எனக்கு உண்டாக்கி விட்டது. வியப்பினாலும் திகைப்பினாலும் என் தலை கிறுகிறுவென்று சுற்ற ஆரம்பித்தது.

அந்தக் காட்சி என்னவென்றால், அந்த மச்சு அறையின் பலகணியின் அருகில் ஓர் இளம் பெண் நின்று ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக் கொண்டிருந்தாள். காம்பவுண்டில் ஸோல்ஜர்கள் வைத்துக் கொண்டிருந்த டார்ச் லைட்டிலிருந்து மங்கிய வெளிச்சத்தில், அந்தப் பெண்ணின் முதுகுப் பக்கம் 'ஸில் ஹவுட்' படம் மாதிரி தெரிந்தது. அவள் யாராயிருக்கும்? ஜன சூன்யமான இந்த வீட்டில் இந்த நேரத்தில் தன்னந் தனியாக அவள் என்னுடைய அறையில் இருப்பது எப்படி?

மனத்தில் துணிச்சலை வருவித்துக் கொண்டு, ''யார் அங்கே?'' என்று கேட்டேன். வெளியிலிருந்து ஸோல்ஜர்களுக்குக் கேட்கக் கூடாதென்று மெல்லிய கள்ளக் குரலில் பேசினேன். அந்த இடத்தில் அந்த வேளையில் என்னுடைய குரல் எனக்கே பயங்கரத்தை அளித்தது என்றால், அந்தப் பெண் அப்படியே பேயடித்தவள் போல் துள்ளித் திரும்பி என்னைப் பீதி நிறைந்த கண்களால் பார்த்ததில் வியப்பு இல்லையல்லவா?

ஆனால் திரும்பிப் பார்த்த மறு கணத்தில் எங்கள் இருவருடைய பயமும் சந்தேகமும் நீங்கி வியப்பு மட்டுந்தான் பாக்கி நின்றது. என்னைப் பொறுத்த வரையில், மனத்திற்குள்ளே ஒருவகையான ஆனந்த உணர்ச்சி உண்டாகவில்லையென்று சொல்ல முடியாது.

''நீயா?''

''நீங்களா?''

நான் சாப்பிட்டுக் கொண்டிருந்த கல்பாத்தி ஹோட்டலுக்குப் பக்கத்து வீட்டு வாசலில் சில சமயம் இந்தப் பெண்ணை நான் பார்த்திருக்கிறேன். அப்போதெல்லாம் அவளையும், தாய் நாட்டிலே எனக்கு மாலையிடுவதற்காகக் காத்துக் கொண்டிருந்த என் அத்தை பெண்ணையும் என் மனம் ஒப்பிட்டுப் பார்ப்பதுண்டு. (நான் பர்மா நாட்டுக்கு வந்ததின் காரணங்களில் ஒன்று, அத்தை மகளுடன் என் கலியாணத்தை ஒத்திப் போடுவதற்கு என்னும் இரகசியத்தை இந்த இடத்தில் சொல்லி வைக்கிறேன்.)

மற்றபடி வேறு விதமான எண்ணம் அந்தப் பெண்ணைப் பற்றி என் மனத்தில் உண்டானதில்லை. ஏனெனில், அந்த வீட்டிலே குடியிருந்த ராவ்சாகிப் ஏ. வி. சுந்தா என்பவர் ரங்கூனில் உள்ள தென்னிந்தியர்களுக்குள்ளே ஒரு பிரமுகர் என்றும், மாதம் இரண்டாயிரம் மூவாயிரம் வருமானம் உள்ளவரென்றும் எனக்குத் தெரியும். அப்பேர்ப்பட்டவருடைய புதல்வியைக் குறித்துக் கனவு காண்பதிலே என்ன பிரயோஜனம்?

அந்தப் பெண் இப்போது என் அறையில் இருட்டில் தன்னந் தனியாய் நிற்பதைக் கண்டதும் எனக்கு எப்படி இருந்திருக்கும் என்று நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்.

## 3. கிழக்கு ரங்கூன்

**எ**ன் வியப்பை ஒருவாறு அடக்கிக் கொண்டு, ''இங்கே எப்படி வந்தாய்? எப்போது வந்தாய்?'' என்று கேட்டேன்.

''நீங்கள்?'' என்று அவள் திருப்பிக் கே'

டதில், பல கேள்விகள் தொனித்தன.

சற்றுக் கோபத்துடன், ''அப்படியா? உனக்கு அவசியம் தெரிய வேண்டுமா? இது என்னுடைய அறை! என் அறையிலிருந்து என் சாமான்களைத் திருடிக் கொண்டு போவதற்காக வந்தேன். கொல்லைப்புறமாகச் சுவர் ஏறிக் குதித்து வந்தேன். வந்த வழியாகத்தான் திரும்பிப் போகப் போகிறேன். உனக்கு இங்கே ஏதோ முக்கியமான வேலை இருப்பதாகத் தெரிகிறது. கவலைப் படாதே! இதோ போய் விடுகிறேன்'' என்று சொல்லி என் கைப்பெட்டியைத் தூக்கிக் கொண்டேன்.

''ஐயோ! என்னையும் அழைத்துக் கொண்டு போங்கள். உங்களுக்குப் புண்ணியம் உண்டு!'' என்று அவள் கூறிய போது, அவளுடைய நெஞ்சு 'பட், பட்' என்று அடித்துக் கொள்ளும் சத்தமே நான் கேட்கக் கூடியதாயிருந்தது.

அவளிடம் நான் உடனே இரக்கம் கொண்டாலும் இன்னும் கொஞ்சம் அவளைக் கெஞ்சப் பண்ண வேண்டுமென்ற அசட்டு எண்ணத்தினால், ''அதெல்லாம் முடியாது. புண்ணியமும் ஆச்சு, பாவமும் ஆச்சு! எனக்கு வேறே வேலை இல்லையா?'' என்றேன்.

உடனே, அந்தப் பெண், ''அப்படியா சமாசாரம்? இதோ நான் 'திருடன்' 'திருடன்' என்று கூச்சல் போடுகிறேன்!'' என்று சொல்லிக் கொண்டே ஜன்னல் பக்கம் போனாள். நான் அவசரமாய்ச் சென்று அவளைக் குறுக்கே மறித்து, ''வேண்டாம்! வேண்டாம்!'' என்று சொல்லிக் கொண்டே அவளுடைய கரங்களைப் பற்றினேன். மேலே போகாமல் அவளைத் தடுப்பதற்காகவே அவ்விதம் செய்தேன். அவளோ, திருப்பி என் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, ''என்னை அழைத்துக் கொண்டு போவதாகச் சத்தியம் செய்து கொடுங்கள். இல்லாவிட்டால், கூச்சல் போடுவேன்!'' என்றாள்.

அவளுடைய கைகளைத் தொட்ட அதே நிமிஷத்தில் நான் என் சுதந்திரத்தை அடியோடு இழந்து அவளுக்கு அடிமையாகி விட்டேன் என்பதையும், அவளுடைய சுண்டு விரலால் ஏவிய காரியங்களையெல்லாம் சிரஸினால் செய்யக் கூடிய நிலைமையில் இருந்தேன் என்பதையும் நல்ல வேளையாக அவள் அறிந்து கொள்ளவில்லை. நானும் அவளுக்கு அச்சமயம் தெரியப் படுத்த விரும்பவில்லை.

''ஆகட்டும்; பயப்படாதே! உன் அப்பா, அம்மா எங்கே?'' என்று கேட்டேன்.

''அப்பா, அம்மாவா?'' என்று அந்தப் பெண் பெருமூச்சு எறிந்தாள். மறுபடியும் ''நல்ல அப்பா, நல்ல அம்மா!'' என்று பல்லைக் கடித்துக் கொண்டாள்.

அழுகையும் ஆத்திரமுமாக அவள் கூறியதிலிருந்து பின்வரும் விவரங்கள் தெரிய வந்தன:

அன்று மத்தியானம் அந்தப் பெண் ஸ்நான அறையில் குளித்துக் கொண்டிருந்த போது, திடீரென்று 'ஸைரன்' ஊதிற்றாம். அவசர அவசரமாக அவள் குளித்து முடிப்பதற்குள் 'டுடும்' 'டுடும்' என்று காது செவிடுபடும் சத்தம் கேட்டதுடன், வீடே அதிர்ந்ததாம். அந்த அதிர்ச்சியில் அவள் தடாலென்று தரையில் விழுந்தாளாம். தலையிலே அடிபட்டு மூர்ச்சையாகி விட்டாளாம். மூர்ச்சை தெளிந்து எழுந்து உடை உடுத்திக் கொண்டு ஸ்நான அறையிலிருந்து வெளியே வந்து பார்த்தால் வீட்டிலே ஒருவரும் இல்லையாம். கொஞ்ச தூரத்தில் தீப்பிடித்து எரியும் காட்சி தென்பட்டதாம். வீதியிலே ஒரே அல்லோகல்லோலமாயிருந்ததாம். அவள் வீட்டுக்கு வெளியே ஓடி வந்து அக்கம் பக்கத்து வீடுகளில் அப்பா, அம்மாவைப் பற்றி விசாரிக்கலாமென்று ஓடி ஓடிப் பார்த்தாளாம். சில வீடுகளில் ஒருவருமில்லையாம். சில வீடுகளில் சாமான்களை அவசரமாக அப்புறப்படுத்திக் கொண்டிருந்தார்களாம். இவளைக் கவனிப்பாரோ, இவளுடைய கேள்விக்குப் பதில் சொல்வாரோ, ஒருவரும் இல்லையாம். கடைசியில், இந்த வீடு திறந்து கிடப்பதைக் கண்டு உள்ளே வந்தாளாம். வீட்டில் ஒருவரும் இல்லாமலிருக்கவே, மச்சு அறையில் யாராவது இருக்கலாமென்று மேலே ஏறினாளாம். அவள் மச்சு அறையில் இருக்கும் போது ஸோல்ஜர்கள் வந்து வீட்டைச் சூழ்ந்து கொண்டார்களாம். பிறகு வெளியில் வரப் பயப்பட்டுக் கொண்டு மச்சு அறையிலேயே ஒளிந்து கொண்டிருந்தாளாம்.

இதையெல்லாம் கேட்டபின், ''உன் அப்பா — அம்மாவுக்குத் தெரிந்தவர்கள், சிநேகிதர்கள், இந்த ஊரில் பலர் இருப்பார்களே? அவர்களுடைய விலாசங்கள் ஏதாவது உனக்குத் தெரியுமா? ஒருவேளை எந்த சிநேகிதர் வீட்டுக்காவது போயிருக்கலாமல்லவா?'' என்று விசாரித்தேன்.

''போயிருக்கலாம்'' என்று சொல்லி, கிழக்கு ரங்கூனில் இரண்டு மூன்று வீடுகளையும் அவள் சொன்னாள்.

உடனே, ஒரு முடிவுக்கு வந்தேன். என் கைப் பெட்டியை ஒரு கையிலே எடுத்துக் கொண்டு அவளை இன்னொரு கையினால் பிடித்துக் கொண்டு கிளம்பினேன். மச்சிலிருந்து கீழே இறங்கி வீட்டின் கொல்லைப் புறமாகச் சென்று காம்பவுண்டுச் சுவரின் மேல் முதலில் அவளை ஏற்றி விட்டுப் பெட்டியை எடுத்துக் கொடுத்தேன். பிறகு நான் ஏறிக் குதித்து, அவளையும் இறக்கி விட்டுப் பெட்டியை எடுத்துக் கொண்டு போய்க் காரில் வைத்தேன்.

டிரைவர் ஆசனத்தில் நான் உட்கார்ந்ததும், அவள் காரின் பின் கதவைத் திறந்து கொண்டு பின் ஸீட்டில் உட்கார்ந்தாள். இது எனக்கு மிகவும் மகிழ்ச்சி தந்தது. அரைப் படிப்புப் படித்து நாணம், மடம் முதலிய ஸ்திரீகளுக்குரிய குணங்களைத் துறந்த பெண் அல்ல அவள் என்பதற்கும் அது அறிகுறியாயிருந்தது.

அதிர்ஷ்டவசமாக, முதல் முதல் நான்

